மாலை 47 மணி 3 மார்ச்சு 2005 விலை ரூ.10



# திருக்கோயில்

இந்து சமய அறநிலைய ஆட்சித் துறை வெளியீடு



## பழநியில் பங்குனி உத்திரம்

- நிறைமதி

## தெய்வத் திருமணங்கள்

- சிறப்புக் கட்டுரை

## திருவிழாக்களின் சிறப்பு

- "எழுத்துச்சித்தர்" பாலகுமாரன்

## அறுபத்துமூவர் அருள் வரலாறு

புதிய தொடர் ஆரம்பம்

## கட்டபொம்முவிடம் பதக்கம் கேட்ட செந்திலாண்டவர்

[காலச்சுவடுகள்]

## கடமைதவறா கருநிறத்தான்

- ஏ.எம்.ஆர்.




# அருள்மிகு வடபழநி ஆண்டவர் திருக்கோயில்

வடபழநி, சென்னை-26.

## பங்குனி உத்திர இலட்சார்ச்சனை
## அழைப்பிதழ்

*தாரண ஆண்டு, ஆங்கில ஆண்டு 2005*

திருமுருகன் தலங்களுள் தொன்மை வாய்ந்த தென்பழநியில் பழநியாண்டியாகவும், சென்னையம்பதியில் கோடம்பாக்கம் வடபழநியில் வேண்டுவோர்க்கு வேண்டுவன அருள்செய்ய வடபழநி ஆண்டவராகவும் எழுந்தருளியிருப்பவர் அருள்மிகு வடபழநி ஆண்டவர்.

ஆன்மாக்கள் உய்யவும், நாட்டு மக்கள் நலமுடன் வாழவும் வேண்டி நடைபெறும் பங்குனி உத்திரவிழாவில் 16-3-2005 புதன்கிழமை முதல் 24-3-2005 வியாழக்கிழமை உச்சிக்காலம் முடிய அருள்மிகு வடபழநியாண்டவருக்கு இலட்சார்ச்சனை நடைபெறும்.

அர்ச்சனை ஒன்றுக்கு ரூ.50/- செலுத்தி ரசீது பெற்றுக் கொள்ளும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறது. இலட்சார்ச்சனை பிரசாதமாக லட்டு, முறுக்கு, மற்றும் தேங்காய், பழம் வழங்கப்படும்.

இலட்சார்ச்சனையில் பங்கு கொண்டு அருள்மிகு வடபழநி ஆண்டவரின் பேரருளைப் பெற்றுய்யுமாறுவேண்டுகிறோம்.

25-3-2005 அன்று இரவு சிறப்பு அலங்காரத்துடன் சுவாமிப் புறப்பாடு நடைபெறும். திருக்கோயில் திருப்பணிகளுக்கு நன்கொடைகள் வரவேற்கப்படுகின்றன.

## தெப்பத்திருவிழா - 2005

26-3-2005 27-3-2005 28-3-2005

தினசரி இரவு 7.00 மணியளவில் தண்ணீர் இல்லாததால் திருக்குளத்தில் உள்ள நீராழி மண்டபத்தில் மூன்று நாட்களும் சிறப்பு அலங்காரத்துடன் ஆராதனை நிகழ்ச்சி நடைபெறும்.

| சுவாமி உலா விவரம் | உபயதாரர்கள் |
|---|---|
| 26-3-2005 சனிக்கிழமை ஸ்ரீ வடபழநி ஆண்டவர் புறப்பாடு | ஸ்ரீ வடபழநி ஆண்டவர் பங்குனி உத்திர பால் காவடி சபையினர், திருவல்லிக்கேணி |
| 27-3-2005 ஞாயிற்றுக் கிழமை ஸ்ரீ பாலசுப்பிரமணியர் வள்ளி, தெய்வானை புறப்பாடு | திரு.ஆர்.எஸ்.மணி அவர்கள் ஆர்.ஏ.புரம் -சென்னை -28. |
| 28-3-2005 திங்கட்கிழமை ஸ்ரீ ஷண்முகர் வள்ளி, தெய்வானை புறப்பாடு | டாக்டர் திருமதி குழந்தையம்மாள் ரவீந்திரன் அவர்கள் மாதவரம் |

இவண்

**எஸ். ஹரிப்ரியா, பி.எல்.பி.ஜி.டி.எல்.ஏ.,**
துணை ஆணையர் / நிர்வாக அதிகாரி

**கே. துரைசாமி, எம்.ஏ.பி.எல்.,**
தலைவர், அறங்காவலர் குழு

அறங்காவலர்கள்

ஜெ.வைத்தியநாதன் டாக்டர் கே.ராஜ்கார்த்திக் கு. சுப்பராயன் ஆர். ஜானகி




திருக்கோயில்

திருவள்ளுவர் ஆண்டு 2036 தாரண - பங்குனி
மாலை-47 மணி -3 மார்ச்சு 2005


# அன்பார்ந்த வாசகப் பெருமக்களே!

வணக்கம்.

''பத்தராய்ப் பணிவார்கள் எல்லார்க்கும் அடியேன்'' என்று பாடுகின்றார் சுந்தர மூர்த்தி நாயனார்.

ஒரு பக்தனாய் - அடியனாய்த் திருக்கோயில்கள் பலவற்றிற்குச் சென்று வழிபட்டு வந்துள்ளேன்.

பல்லாண்டுக் காலமாக அறநிலையத்துறை வெளியிட்டு வரும் ''**திருக்கோயில்**'' இதழுக்கு நானும் ஒரு ஆர்வமிகு வாசகனாய்ப் பயின்று வந்துள்ளேன்.

கி.பி. 15ஆம் நூற்றாண்டில் தென்காசி விசுவநாதர் ஆலயத்தைக் கட்டிமுடித்த அரிகேசரி பராக்கிரம பாண்டியன், அக்கோயிலில் பொறித்துச் சென்ற கல்வெட்டுப் பாடல்களால் அம்மன்னனுடைய மிகச் சிறந்த ஆன்மிக உணர்வை நாம் அறிந்து கொள்ள இயலும்.

''இறைவனருளால் இக்கோயிலை யான் அமைத்துள்ளேன். வருங்காலத்தில் ஏதேனும் ஒரு குற்றம் இக்கோயிலுக்கு வருமானால், அதனை யாரொருவர் திருப்பணி செய்து சரிப்படுத்துகிறார்களோ அவர்களின் பொற்பாத கமலங்களை இப்போதே என் தலைமேல் போற்றி வைத்துப் பணிகின்றேன்'' எனும் பொருள்பட பாடல்கள் புனைந்து

**''திரிசேர் விளக்கெனக் காப்பார் பொற்பாதம்**

**என் சென்னியதே''**

என்று தம் பொன்னான உணர்வுகளைப் பொறித்துச் சென்றுள்ளான் பராக்கிரம பாண்டிய மன்னன்.

**''மண்திணி ஞாலத்து வாழ்வோர்க்கெல்லாம்**

**உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே!''** என்ற வாக்கிற்கேற்ப, அறநிலையத் துறையில் தானங்களில் மிகச் சிறந்த அன்னதானத் திட்டத்தை அறிமுகப்படுத்தி அதனைத் திறம்பட நிகழ்த்தியும், பாடல் பெற்ற - மங்களாசாசனம் பெற்ற திருக்கோயில்களின் திருப்பணிகளைத் திறம்பட நிகழ்த்தியும், ஆதிதிராவிடர்கள் வாழும் குடியிருப்புப் பகுதிகளில் திருக்கோயில்களைச் சீரமைத்துத் தரும் திருப்பணிகளைத் திறம்பட நிகழ்த்தியும் ஒரு **பொற்காலச் சரித்திரத்தைப்** படைத்து வருகிறார் நம் **மாண்புமிகு தமிழ்நாடு முதலமைச்சர் அவர்கள்.**

ஞான தண்டாயுத பாணி சுவாமியின் திருவருளைக் கொண்டாடும் பங்குனி உத்திரத்தை முன்னிட்டு மார்ச்சு 2005 'திருக்கோயில்'' இதழ்முகப்பை **அருள்மிகு பழநி ஆண்டவர் வண்ணப் படம்** அலங்கரிக்கின்றது.

''**திருவிழாக்களின் சிறப்பை**'' விவரிக்கும் ''**எழுத்துச்சித்தர்**'' **பாலகுமாரன்** அவர்களின் படைப்பும், ''ஜோதிடச் சக்கரவர்த்தி'' **ஏ.எம்.ஆர்.** அவர்களின் தொடர்க் கட்டுரையும், சித்தர் மச்சேந்திரர் பற்றிய முனைவர் **இரா. செல்வக் கணபதி** அவர்களின் கட்டுரையும், ''**பழநியில் பங்குனி உத்திரம்**'' பற்றிய சிறப்புக்கட்டுரையும், பங்குனி உத்திரத்தில் நடைபெற்ற தெய்வத் திருமணங்களைப் பற்றிய கட்டுரைகளும் வெகுவாக உங்களைக் கவரும் என நம்புகிறேன்.

திருச்செந்திலாண்டவர், தம் குறத்திக்காக ஒரு பதக்கம் கேட்டார் - கட்ட பொம்முவிடம்; ''காலச் சுவடுகள்'' பகுதி மிகச் சுவையானது.

பழநிப் பஞ்சாமிர்தமாய் இனிக்கும் திருக்கோயில் மார்ச்சு இதழைப் படித்து மகிழ்ந்து உங்கள் எண்ணங்களை எங்களுடன் பகிர்ந்து கொள்ளுமாறு அன்புடனே வேண்டுகின்றேன்.

அன்புள்ள


**த. பிச்சாண்டி,** இ.ஆ.ப.
ஆணையாளர்,

*இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை,*
*119 உத்தமர் காந்தி சாலை, சென்னை - 600 034.*

## மாண்புமிகு தமிழ்நாடு முதல் அமைச்சர் அவர்கள் தொடங்கி வைத்த

# இலவசத் தென்னங்கன்று திட்டம்



மாண்புமிகு தமிழ்நாடு முதல் அமைச்சர் அவர்கள் கிராமப்புறங்களில் பிறக்கும் பெண் குழந்தைகளுக்கு இலவசத் தென்னங்கன்று வழங்கும் புதிய திட்டத்தை 24-2-2005 அன்று தலைமைச் செயலகத்தில் தொடங்கி வைத்துத் தென்னங்கன்று வழங்குகிறார்கள்.

### இதழின் உள்ளே...

# பழநியில் பங்குனி உத்திரம்

- அ. நிறைமதி

பங்குனி உத்திர நன்னாளில் பழநிமுருகரைத் தரிசித்து வரம் பெற இலட்சக்கணக்கான பக்தர்கள் பால்காவடி, பன்னீர்க்காவடி, புஷ்பக் காவடி, தீர்த்தக்காவடி எனக் காவடிகள் ஏந்திப் பாதயாத்திரையாக வரும் காட்சியைக் காணக் கண்கோடி வேண்டும். காண்பார் பாவம் யாவும் பறந்தோடிப் போகும்.

ஈரேழு உலகங்களில் உள்ள திருத்தலங்கள் யாவற்றையும், வாழ்நாள் முழுதும் சென்று வணங்கிப் பெறத்தக்க புண்ணியங்களைப் பழநிமுருகனை ஒரே ஒரு நாள் மனமொன்றி வழிபட்டால் பக்தர்கள் பெற்று விட முடியும்.

இச்சிறப்பினைப் பழநித் தலபுராணம்

**''கந்தனின் பூசை ஓர்நாள்**
**கடிநகர் இதனில் ஆற்றில்**
**இந்தமா ஞாலம் ஆதி**
**புவனங்கள் தொறும் எஞ்ஞான்றும்**
**வந்தனைப் புரியில் உண்டாம்**
**பலன்எய்தும் மனமொன்றி இங்ஙன்**
**சிந்தனைப் புரியில் ஓரேழ்**
**கோடியும் சித்தி யாமால்''**

என்று இனிதினில் எடுத்து இயம்புகின்றது.

பழநித்திருத்தலம் மூர்த்தி, தீர்த்தம் தலம் எனும் மூன்றாலும் முதன்மை பெற்ற திருத்தலம்.

**''அண்ணலம் பதிகள் தம்முள்**
**ஆவினன் குடியே ஏற்றம்**
**எண்ணரும் நதிகள் தம்முள்**
**சண்முக நதியே ஏற்றம்**
**எண்ணரும் தெய்வம் தம்முள்**
**முருகனே ஏற்றம் என்றே**
**நண்ணிஇப் பதியில் ஆடி**
**நவின்றிருச் சிப்பர் முத்தர்''**

என்று தலப்புராணம் பாடுகின்றது.



சித்தர்களும் முத்தர்களும் முந்திவந்து பழநி முருகனைத் தரிசித்துப் பயன் பெறுவது தொன்று தொட்டு இன்றுவரை நடைபெறும் அன்றாட நிகழ்ச்சியாகும். பழநிமலையில் முருகப்பெருமான் விரும்பி வந்து அமர்ந்த அந்த அற்புத வரலாற்றினை இங்குக் கண்டு மகிழலாம்.

கயிலாயத்தில் இருந்த சிவகிரி, சக்திகிரி என்னும் இரு புண்ணிய மலைகளை அகத்தியர் பூலோகம் கொண்டுவர விரும்பினார். அகத்தியரின் விருப்பத்தை ஏற்றுச் சிவபெருமானும் அம்மலைகளை அகத்தியருக்கு வழங்கினார்.

அவ்விரு மலைகளையும் பொதிய மலைக்குக் கொண்டு வந்து சேர்க்கும் பணியை இடும்பனிடம் வழங்கினார் அகத்தியர்.

இடும்பனும் சிவகிரி , சக்தி கிரி எனும் இருமலைகளைக் காவடியாகக் கட்டித் தன் தோளில் தூக்கிக் கொண்டு திருவாவினன்குடிக்குக் கொண்டு வந்தான்.

இடும்பனுக்குப் பசியும் தாகமும் உண்டாகக் களைப்பினால் அவ்விருமலைகளையும் இறக்கி வைத்துக் காய்கனிகளை உண்டு சிறிது நேரம் ஓய்வெடுத்துக் கொண்டான்.

அப்பொழுது முருகப் பெருமான் ஒரு மானிடச் சிறுவனாய் வந்து சிவகிரியில் ஒரு குராமரத்தின் மேல் ஏறிக் குதித்து விளையாடலானார். பசியாறிக் களைப்பு நீங்கிய இடும்பன் மறுபடியும் மலைக்காவடியைத் தூக்க முயன்ற போது அவனால் தூக்க முடியவில்லை.

என்ன காரணம் என்று திகைத்த இடும்பன் குராமரத்தில் குதித்து விளையாடிக் கொண்டிருந்த சிறுவனைக் கண்டான்.

''அடேய் சிறுவா! கீழே இறங்கு'' என்று அதட்டினான் இடும்பன்.

''நான் இறங்க மாட்டேன். உனக்குப் பலமிருந்தால் மலையைத் தூக்கிக் கொண்டு போ'' என்று கூறிச் சிரித்தான் சிறுவன்.

இடும்பன் என்ன முயன்றும் காவடியைத் தூக்க முடியவில்லை. கோபம்கொண்ட இடும்பன்,

## பங்குனி உத்திரத்தின் சிறப்புகள்



1. பார்வதி - பரமசிவன் திருமணநாள்
2. முருகர் - தெய்வானை திருமணநாள்
3. சீதா - இராமர் திருமணநாள்
4. ஆண்டாள் - ரங்கமன்னார் திருமணநாள்
5. காஞ்சி வரதர் - தாயார் திருமணநாள்
6. காஞ்சிஏகாம்பரர் - தேவிகாமாட்சி திருமணநாள்
7. ரதிக்காக மன்மதனை சிவபெருமான் எழுப்பித்தந்த நாள்
8. மாதங்களில் 12 வது மாதம் பங்குனி; நட்சத்திரங்களில் 12 வது நட்சத்திரம் உத்திரம். இவை இரண்டும் ஒன்றாக வரும் நாள் பங்குனி உத்திரம்.

தன் கதாயுதத்தைச் சிறுவன் மேல் வீச, சிறுவனும் தன் வேலாயுதத்தால் இடும்பனின் கதையைப் பிளந்து அவன் மார்பையும் துளைத்தார்.

சாகும் தறுவாயில் இடும்பன் ''ஓ குருநாதா'' ''ஓ இடும்பி! நான் செத்தேன்'' என்று அலறியவாறு சாய்ந்தான்.

அவன் அலறலைக் கேட்டு அங்கு இடும்பனின் மனைவி இடும்பி விரைந்து வந்தாள்.

தன் கணவனைக் கொன்ற சிறுவன் சாதாரண சிறுவனாக இருக்க இயலாது. அவன் முருகப் பெருமானே என்று உணர்ந்த இடும்பி சிறுவனைப் பணிந்து தன் கணவனை உயிர்ப்பித்துத் தன் மாங்கல்யத்தைக் காக்குமாறு வேண்டினாள்.

அதேநேரம் அங்கே விரைந்து வந்த அகத்தியர் ''ஏ பாலகா! என் மலைகளைப் பறித்து என் இடும்பனையும் கொன்று விட்டாயா? உன்னை என்ன செய்கிறேன்? பார்!'' என்று கூறி சில விஷ குளிகைகளைச் சிறுவன்மேல் வீசினார்.

வாடைப்பட்டாலே உயிரை மாய்த்து விடக் கூடிய அவ்விஷ குளிகைகளைச் சிறுவன் உண்டு விட, அவனுக்கு ஊறு ஒன்றும் நேரவில்லை.

சிறுவனும் தன் மேனி வியர்வையை உருட்டிக் குளிகையாக்கி அகத்தியர் மேல் வீச, அகத்தியர் பறந்து உருண்டார்.

''முருகா சரணம், முருகா சரணம்'' என்று முறையிட்ட அகத்தியரை அச்சிறுவனே காப்பாற்றி அகத்தியருக்குத் தம் மெய்க் கோலத்தைக் காட்டியருளினார். இடும்பனையும் உயிர் பெற்று எழச் செய்தார்.

''அகத்தியரே! உமக்கு ஈசர் அருளிய மலைகள் எமக்கு உரியன ஆகட்டும். சிவகிரியில் கோயில் கொண்டு யாம் வையத்தைக் காத்து இரட்சிப்போம். தமிழ் உள்ளளவும் உமது புகழும் விளங்க யாம் வரம் அளித்தோம்'' என்று அகத்தியருக்கு அருள் புரிந்தார் முருகப்பெருமான்.

''உமது சீடன் இடும்பன், எமக்காக இந்த குன்றுகளைக் காவடியாகக் கொண்டு வந்தது போல், எமக்குப் பிரியமானவற்றைக் காவடியாகக் கொண்டு வரும் பக்தர்களுக்கு யாம் கோரும் வரம் அளிப்போம். எம் சந்நிதானத்தில் இடும்பனுக்கும் ஓர் சந்நிதி உண்டு. எம் பக்தர்கள் இடும்பனையும் வழிபடுவார்களாக'' என்று முருகப் பெருமான் வரம் வழங்கியருள் புரிந்தார்.

இவ்வாறு கயிலாயத்திலிருந்த சிவகிரியைத் திருஆவினன்குடிக்கு இடும்பன் கொண்டு வந்த போது தமக்குரிய மலையாக முன்பதிவு செய்து கொண்டு விட்ட முருகப் பெருமான். நாரதர் ஞானப்பழம் கொண்டு வந்து சிவபெருமானாரிடம் கொடுத்த போது, அப்பழம் தமக்குக் கிடைக்கவில்லை என்று கோபித்து சிவகிரி மேல் வந்து அமர்ந்து விடுகிறார்.

அப்போது சிவபெருமானும், பார்வதியும், விநாயகரும் வந்து ''ஞானப்பழம் நீ! உனக்கு எதற்கு இப் பழம்?'' என்று வேண்டியபடியால் பழம் காரணமாக வந்து அமர்ந்த மலை ''பழநிமலை'' எனும் பெயர் பெறுவதையும் நமக்குப் பழநித் தலபுராணம் நன்கெடுத்து இயம்புகின்றது.

ஞானப் பழமாகத் திகழும் முருகப்பெருமான் பழநி மலையில் வந்து திருக்கோயில் கொண்டமைக்கும் காரணம் ''பூவுலகமக்களின் வினைகள் பொடி பொடியாக்கி அவர்களை வீடுபேறு அளித்துக் காக்கவே'' என்று ''தண்டபாணிப் பதிகம்'' எனும் அருள்நூலை யாத்த தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள் கூறும் அரிய பாடல் இங்கு நாம் கண்டு மகிழத்தக்க ஒன்றாகும்.

**''ஞானப் பழத்தைப் பிழிந்துரசம் அன்பினொடு**
**நாம் உண்ணவும் கொடுத்த**
**நல்லகுரு நாதனுக்கு என்ன விதம் இக்கனியை**
**நாம் ஈவது என்று நாணித்**
**தான்அப் பனித் தலையர் தரவில்லை ஆதலால்**
**சாரும் ஒரு பிழை இல்லையே!**
**சக்திவடி வேலொடும் தத்துமயில் ஏறிடும்**
**சண்முகா குறையும் உளதோ?**
**ஏன் இப்படி கோவணத் தொடும் தண்டுகொண்டு**
**இங்குற்றோர் ஆண்டி யானாய்**
**எமதுவினை பொடிபடவும் அல்லவோ வந்துநீ**





## திருக்கல்யாணத் தத்துவம்

அம்மையும் அப்பனும் ஆண்டுதோறும் பங்குனி உத்திரத் திருநாளன்று திருமணம் கொள்வது மரபு.

ஒவ்வொராண்டும் பங்குனி உத்திரத் திருவிழாவிற்குப் பின்னர் காளையரும் கன்னியரும் திருமணம் புரிந்து உலக வளர்ச்சிக்கு உறுதுணையாகத் திகழவேண்டும் என்பதாலேயே பங்குனி உத்திரத்தில் திருக்கல்யாண உற்சவம் நிகழ்த்தப்படுகின்றது.

**இப்படி இருக்கலாம் என்ஆ**
**சான்அப்பன் என்ஐயன் என்னவும் எண்ணினேன்**
**தருவையருள் பழநி மலையில்**
**சந்ததம் குடிகொண்ட சங்கரன் கும்பிடும்**
**தண்டபாணித் தெய்வமே!"**

என்று இத் தண்டபாணிப் பதிகப் பாடல் ஞானப் பழமாகத் திகழும் பழநிமுருகன் திருவருள் சிறப்பினைத் தெற்றென விளக்குகின்றது.

ஈரேழு உலகத்தினரும், மூவரும், தேவரும் யாவரும் வந்து வணங்கிடும் ஒரே ஒப்பற்ற திருத்தலம் பழநித் திருத்தலமே என்பதைத் தண்டபாணிப் பதிகத்தில் பாடி உருகுகின்றார் தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள்.

தாயார் பார்வதியாரின் செல்வமும், தந்தையார் சிவபெருமானார் செல்வமும், நிதிக் கடவுளாம் குபேரன் கொண்டு விளங்கும் செல்வமும், பாற்கடலில் பள்ளி கொண்டு விளங்கும் தாய்மாமன் திருமாலின் செல்வமும், அட்ட ஐஸ்வரியங்களுக்குச் சொந்தக்காரியான மாமி திருமகள் கொண்டு விளங்கும் செல்வமும், காமதேனு, கற்பகம், சிந்தாமணி எனப் பெருஞ்செல்வம் கொண்டு விளங்கும் பெண் கொடுத்த மாமனான தேவேந்திரன் கொண்டுள்ள செல்வமும் யாவும் பழநி முருகப் பெருமானின் செல்வமே யாதலால் அச்செல்வ வளமும், வரமும் பெற ஈரேழு பதினான்கு உலகத்தைச் சார்ந்தவர்களும் பழநித் திருத்தலத்திற்கு நாளும் நாளும் சாரிசாரியாய் வந்த வண்ணமே உள்ளனர் என்று பழநித் திருத்தலத்தின் மகிமையை எடுத்துக் காட்டுகின்றார் தவத்திரு சங்கரதாஸ் சுவாமிகள்.

**''பொன்மயக் கிரிபெற்ற புதல்வியோ அன்னையாம்**
**பொருளுக்கோர் அதிபதி எனும்**
**புட்பக விமானத்தனைத் தோழனாய்க் கொண்ட**
**...**
**கன்மலை குடைகொண்டு மழை தடுத்து அன்று நிரை**
**காத்தவொரு கடல் வண்ணனோ**
**கருதுதாய் மாமனாம் பெரிய தனமேந்திடும்**
**கமலமாதுன் மாமியாம்**
**பன்மலர் தொடைபூண்டு மூவுலகு ஆள்பவன்**
**பார்க்கிலொரு பெண் தந்தவன்**
**பாரில் இப் பெருஞ்செல்வம் உற்றும் நீ கோவணப்**
**பண்டாரமாய் வருவதேன்?**
**சென்மவெப்புப் பிணி அகற்றுமுயர் சஞ்சீவி**
**தழைய வரு பழநிமலையில்**
**சகல உலகினரும் அடிபரவ ஒருபொருளுதவு**
**தண்டபாணி தெய்வமே''**

என்பது பழநிமுருகனின் மாட்சியை மன்பதைக்கு உணர்த்தும் அற்புதப் பாடல் ஆகும்.

**''காசியில் மீறிய பழனாபுரி'' ''பதிநால் உலகோர் ஏத்தும் பழனாபுரி'' ''அதிசயம் அநேகமுற்ற பழநி''** என்று பழநிமலையை மிக அதிகமான திருப்புகழ்களில்-96 திருப்புகழ்களில் பாடிப் பரவுகின்றார் அருணகிரிநாதர்.

பழநியைத் தரிசிக்கா விட்டால் - பழநியைத் தரிசித்த அடியார்களின் பாத துளியைத் தலையில் தாங்கிக் கொள்ளாவிட்டால் அத்தகைய கல்நெஞ்சங்களுக்கு உய்வே இல்லை என்றும் அறிவுறுத்துகின்றார் அருணகிரிநாதர்.

**''படிக்கின்றிலைப் பழநித் திருநாமம்**
**படிப்பவர்தாள்**
**முடிக்கின்றிலை முருகா என்கிலை**
**முசியாமல் இட்டு**
**மிடிக்கின்றிலை பரமானந்தம் மேற்கொள விம்மி விம்மி**
**நடிக்கின்றிலை நெஞ்சமே தஞ்சமேது நமக்கு இனியே''**

என்பது கந்தர் அலங்காரம்.

பழநி மலையைச் சுற்றிவர, அங்கு வீசிக்கொண்டிருக்கும் சஞ்சீவிக் காற்றின் மகிமையால் உடற்பிணிகள் யாவும் தீர்ந்து விடும்.

பழநிமலைமேல் கோயில் கொண்டு விளங்கும் அருள்மிகு தண்டாயுதபாணி சுவாமியாம் பழநிமுருகரால் நம் பிறவிப் பிணியும் தீர்ந்து விடும்.

பழநி முருகனைப் பங்குனி உத்திர நன்னாளில் தரிசித்து சகல செல்வ வளங்களும் நலங்களும் பெற்றுப் பெரும் பேரின்பப் பெருவாழ்வு பெற்றுச் சிறப்புறுவோமாக! ★

# கமலவதி எனும் தாய்த் தெய்வம்

சோழ நாட்டை ஆண்ட அரசர்களில் ஒருவன் சுபதேவன். அவன் மனைவியே அருங்குணவதியாகிய கமலவதி.

அக்கமலவதி . தில்லைக் கூத்தர் திருவருளால் தாயாகும் பேறு பெற்றாள்.

குழந்தை பிறக்கப் போகும் நேரத்தில் ஜோதிடர் ஒருவர் ''ஒரு நாழிகை நேரம் கழித்து இக்குழந்தை பிறக்குமானால் மூன்று உலகத்திலும் இக்குழந்தையின் பெயர் சிறப்புற விளங்கும்'' என்று கூறினார்.

அதனைத் தாதிப் பெண்கள் வாயிலாகக் கேட்டறிந்த கமலவதி தன்னை அந்த ஒரு நாழிகை நேரத்திற்குத் தலை கீழாகக் கட்டித் தொங்கவிடுமாறு செய்து, சோதிடர் தெரிவித்த நல்ல நேரத்திலேயே குழந்தையைப் பெற்றெடுத்தாள்.

அவ்வாறு பிறந்த குழந்தை சிவந்த கண்களை உடையதாக இருந்தது.

''என்னுடைய கோ, செங்கணானோ?'' என்று கேட்டபடி, குழந்தையைப் பார்த்துப் பரவசப்பட்ட கமலவதி அதே நேரத்தில் இறைவன் திருவடி சேர்ந்து விட்டாள்.



தன் மைந்தனின் பெருமைக்காகத் தன்னைத் தலைகீழாகக் கட்டித் தொங்கவிடச் செய்த கற்பரசி கமலவதி எனும் தாய்த்தெய்வத்தின் பெருமையை என்னவென்று கொண்டாடுவது!

அக்கமலவதித் தாயார் ஈன்றெடுத்த கோச்செங்கணாரே சிவபெருமானுக்கு 70க்கும் மேற்பட்ட மாடக்கோயில்கள் எடுப்பித்த சிறப்பினைக் கொண்டவர் ஆவார்.

இவரே முற்பிறவியில் சிலந்தியாய்ப் பிறந்து திருவானைக்கா இறைவர் மேல் மரங்களிலிருந்து சருகுகள் விழா வண்ணம் வாய் நூலால் வலை பின்னித் திருத்தொண்டு புரிந்தவர் ஆவார்.

இவர்தம் மாட்சிமையைத் திருநாவுக்கரசு சுவாமிகள் தம் தேவாரத்துள்,

**''சிலந்தியும் ஆனைக்காவில் திருநிழல் பந்தல்செய்து**

**உலந்து அவண் இறந்த போதே கோச் செங்காணுமாகக்**

**கலந்தநீர் காவிரிசூழ் சோணாட்டுச் சோழர்தங்கள்**

**குலந்தனில் பிறப்பித்திட்டார் குறுக்கை வீரட்டனாரே''**

எனப் பாடிப் போற்றியுள்ளார்.

**''ஆனைக்காவில் தாம் முன்னம் அருள் பெற்ற**
**அதனை அறிந்தங்கு**
**மானைத் தரித்த திருக்கரத்தார் மகிழும்**
**கோயில் செய்கின்றார்**
**ஞானச் சார்வாம் வெண்ணாவல் உடனே கூட**
**நலஞ்சிறக்கப்**
**பானற் களத்துத் தம்பெருமான் அமரும்**
**கோயிற்பணி சமைத்தார்.''**

எனக் கோச்செங்கணாரைப் பாராட்டுவார் சேக்கிழார்.

இத்தகைய கோயிற் திருப்பணியில் சிறந்த கோச்செங்கணாரைப் பெறத் தன்னையே தியாகம் செய்த கமலவதியாரைத் தாய்த் தெய்வம் எனில் யாரே மறுப்பார்கள்?

★

# திருவிழாக்களின் சிறப்பு



"எழுத்துச்சித்தர்"
**பாலகுமாரன்**

தமிழ் நாட்டில் தை மாதமும், மாசி மாதமும் கு. கல்யாணங்களும் வேறுவிதமான விசேஷங்களும். நம்மூரில் மிகுதியாக இருக்கும். ஆனால் பங்குனி மாதம் தமிழ்நாட்டிலுள்ள எல்லா கோயில்களிலும் வருடாந்திரப் பெருவிழா தொடங்கிவிடும்.

''ஏன் பங்குனியில் பிரம்மோற்சவம் இருக்கிறது'' என்று நான் அடிக்கடி யோசிப்பதுண்டு. தை மாதம் பொங்கல் பண்டிகை, அறுவடை, கல்யாண குதூகலம், மாசி மாதம் கிரஹப்பிரவேசம், உபநயனம், நெற்களஞ்சியம் அமைத்தல், வாகனங்கள் வாங்குவது போன்றவை நடைபெறும். வருடாந்திரப் பெருவிழாவுக்கு பங்குனிமாதம் தான் மிகவும் ஏற்றது.

விவசாயத்தை ஒட்டியே தமிழர் வாழ்க்கை அமைந்திருப்பதால் அறுவடை முடிந்து விளைநிலம் வெறும் நிலம் ஆன பிறகு வெய்யில் வெளியே போக முடியாமல் அதிகமாவதற்கு முன்பு, அதாவது சித்திரைமாதம் வருவதற்கு முன்பே திருவிழாக்கள் தொடங்கி விடுகின்றன.

குளிரும் இல்லை, நிச்சயம் மழை பெய்யாது. அப்படியே இருந்தாலும் மூன்று நிமிட தூறலுக்கு மேல் மழை இருக்காது. எனவே, எந்த விழா நடத்தவும் இதுவே அற்புதமான ஒரு தருணம்.

மழை பெய்து, ஏரி நிறைந்து, பூமி குளிர்ந்து பூமிக்கு அடியிலும் நீர் தங்கி, அந்த நீரினால் தாவரங்கள் நன்கு வளர்ந்து, பூக்கள் கொத்துக் கொத்தாய் பூக்கின்ற நேரம். மணம் நிறைந்த அந்தப் பூக்களை இறைவனுக்கு மாலையாய் தொடுத்துப் போட்டு மக்கள் மகிழ்கின்ற நேரம். எல்லோர் கையிலும் காசு நடமாடுகிற நேரம்.

குறிப்பாய் விவசாயிகளிடம் நெல்விற்ற காசும், கரும்பு விற்ற காசும் புழங்கும் நேரம். திருமணக் கோலாகலங்களால் வண்டி ஓட்டுபவர்களுக்கும் சமையற்காரர்களுக்கும் நாதஸ்வரக் கலைஞர்களுக்கும், பந்தல்

கட்டுபவர்களுக்கும் அதையொட்டிய பலதொழில் புரிபவருக்கும் காசு நடமாடுகின்ற நேரம். செலவழிக்கக் காசு; ஊர் சுற்ற இதமான வெய்யில், இரவு நேரம் அற்புதமான குளுகுளுப்பு. எனவேதான் இந்தக் காலகட்டங்களில் திருவிழாக்கள் நடக்கின்றன.

மூலவர் என்று ஒரு கருங்கல் சிலையை கோயில்களில் வைத்து விட்டு உற்சவர் என்று இன்னொரு சிலையை எதற்காக வைத்திருக்கிறார்கள். இது என்ன விதமான கலாச்சாரம்? எதற்காக இந்த மாதிரியான திட்டங்கள்? கடவுள் வெளியே வந்து ஊர் பார்ப்பதற்காக இல்லை. கோயிலுக்கு வரமுடியாத வயதானவர்கள், நோயுற்றவர்கள் காண்பதற்காக கடவுள் விக்ரகங்களும் வெளியே எடுத்து வரப்படுகிறது. வெளியே எடுத்து வரப்படுவதற்காகவே கல்லாக இல்லாமல் அழகிய வடிவமாய் உலோகத்தில் செய்து கொண்டுவரப்படுகிறது. அலங்கரிப்புக்கு ஏற்ற வண்ணம் பல்வேறு விஷயங்கள் அதிலே பொருத்தப்படுகின்றன.

திருவாசிகை வைக்கப்பட்டுத் திண்டுதிண்டாய் மாலைகள் சாற்றப்பட்டு, தோகள பூட்டப்பட்டு மிகக் கம்பீரமாய் கண்ணுக்கு விருந்தாய் இறைவன் வந்து காட்சியளிக்கிறான். குளுமையான இரவு நேரத்தில் அலங்கார வண்ண விளக்குகளின் ஒளியில் தீப்பந்தங்களுக்கு நடுவே நறுமண புகையூட்டப்பட்ட தெருக்களின் மீது கோலமும், பூக்களும் பரப்பப்பட்ட வீதிகளின்மீது இறைவன் திருவுலா வருகிறான்.

இறைவன் திருவுலா வருகிறான் என்றால் அங்கு பக்திமட்டும்தானா? அமைதியான வழிபாடு மட்டும்தானா?.

இல்லை; இறைவன் வருகை குதூகலமாகஅங்குக் கொண்டாடப்படுகிறது. இறைவனது வருகையை, இறைவனது விழாவை நினைவில் கொள்வது எப்படி? வெறும் சிலைகள் மூலமா? சிலைக்கு உண்டான அலங்காரம் மூலமா? விழாவை நினைவு கொள்வதின் மூலம் இறைவனை நினைத்துக் கொள்ள வேண்டிய நிர்ப்பந்தத்தை இந்துமதம் ஏற்படுத்துகிறது. முரசுகள், எக்காளங்கள், மணிச் சத்தம், எருதின், முதுகில் கட்டப்பட்ட இரட்டை முரசு, வாணவேடிக்கைகள், வேட்டுச்சத்தம், நாதஸ்வரம், பொய்க்கால் குதிரை, கோலாட்டம், வர்ண விளக்குகள், மாதர்கள் வரிசை.

இழுக்கின்ற கயிறு, சுண்டுகின்ற கிராமத்தார், மேலே பந்தலிருந்து கொட்டும் பூக்கள், வரிசையான தீப்பந்தங்கள், விளக்குகள், வரும் வழியெல்லாம் மிட்டாய்க் கடைகள், பலாச்சுளைகள், மல்லியும் முல்லையும்,ஜாதியும், மரிக்கொழுந்தும், தவனமும் வைத்துக் கட்டிய கதம்பம், வீடு முழுக்க சந்தன வாசனை, பன்னீர் தெளிப்பு, அத்தர் பூச்சு, குங்கிலியம், சாம்பிராணி, ஊதுவத்தி, நெய் மணக்கும் சர்க்கரைப்பொங்கல், பால் மணக்கும் தயிர் சாதம், தேன் கலந்த நீர் மோர், வெல்லம், மணம் வீசும் சுக்குக் கஷாயம், எல்லாப் புலன்களாலும் இறைவன் நினைவூட்டப்படுகிறான்.

அப்பொழுதெல்லாம் பெண்கள் வீட்டை விட்டு அதிகம் வெளிறுேவதில்லை. தோட்டமும், துரவுமாக இருக்கும் வீட்டிலும் தோட்டத்திலும் கொல்லைப்புரத்திலும், வீட்டின் மத்தியிலும் காலங்கழிக்கின்ற பெண்கள் ஊர் பார்க்க, உலகம் பார்க்கத் திருவிழாவிற்குப் படையாக வருவார்கள். இரண்டு, முன்று ஆண்கள் துணையோடு முப்பது, நாற்பது பெண்கள் ஒன்றாகச் சேர்ந்து கொள்வார்கள். வயதான பெண்களுக்குப் பின்னால் இளம்பெண்கள் ஒட்டிக்கொள்ள, இளம் பெண்களுக்கு அருகே சிறுமிகள் ஒட்டிக் கொள்ள, குழந்தைகளோடு தாய்மார்கள் வந்து வேடிக்கை

## கும்பாபிஷேகத் தத்துவம்



இறைவன் ஜோதி வடிவமானவர்.

அந்த ஜோதியை சிவாக்கினியிலே விளையுமாறு செய்து கும்பத்திலிருந்து பிம்பத்திற்குக் கொண்டு சேர்ப்பதுதான் கும்பாபிஷேகம்.

அந்தக் கல்லிலே இந்த அருள்ஜோதி சேர்கிறது. கும்பாபிடேகத்திற்கு முன்கல்; கும்பாபிடேகம் ஆன அடுத்த நொடியே கடவுள்.

எதுபோல?

காகிதம் எங்கும் உள்ளது. ஆட்சியிக் உள்ள சர்க்கார் அந்தக் காகிதத்தை ரூபாய் நோட்டாக அச்சிட்டு மாற்றித் தருகிறார்களே! அதைப்போல.

வேத ஆகம மந்திரங்களினாலே கல்லைக் கடவுளாக மாற்றினார்கள் நாயன்மார்கள்.

இரும்பு மைக்காக, மண் குடமாக மாறுவதைப்போல கல் கடவுளாக மாறுகிறது. அங்கே அருள் சைதன்யம் தங்குகிறது. நாம் வணங்க உடனே அருள் கிடைக்கிறது.

- அருளரசு டாக்டர்
திருமுருக கிருபானந்த வாரியார் சுவாமிகள்.

பார்ப்பார்கள். குழந்தைகளுக்கு வேடிக்கை காட்டுவார்கள்.

இந்துமதம் உலகத்தைப் பார் என்று சொல்கிறது. ஆனால் அப்போது பெண்களால் பயணம் செய்ய முடியாது. தொலைவிலுள்ள உலகம் பார்க்க அவர்கள் போகாமல், அவர்கள் இருக்கும் இடத்திற்கு உலகம் வந்துவிடுகிறது.

உலகம் என்பது எது? மக்கள் மனிதர் கூட்டம், விதம்விதமான மனிதர்கள், விதம்விதமான முகபாவங்கள், விதம்விதமான வடிவங்கள் விதம்விதமான மொழிகள், விதம்விதமான கலாச்சாரங்கள், விதம்விதமான உணவுகள், பாடல்கள், ஆடல்கள் பழக்கவழக்கங்கள், வெளியே செல்லாத அந்தப் பெண்கள் வியப்போடு சுற்றிச் சுற்றி திருவிழாக் கூட்டத்தை வேடிக்கை பார்ப்பார்கள்.

இதுவும் ஒருவகை இறை தரிசனம். யாரால் வெளியே உற்று கவனிக்க முடிகிறதோ அவராலேயே உள்ளே பார்க்க முடியும். இதுதான் விக்ரக ஆராதனையினுடைய சூட்சுமம் .விக்ரக ஆராதனை என்ற சூட்சுமத்தில் மனம் ஒன்ற அதாவது விக்ரகத்தில் மனம் ஒன்ற "வேடிக்கைபார்" என்கிறது ஹிந்து மதம்.

எதை வேடிக்கை பார்ப்பது? உன்னைச் சுற்றியிருக்கிற உலகத்தை வேடிக்கை பார்க்க வேண்டும். எப்படி? ஓரமாக ஒதுங்கி எந்தவித அபிப்ராயமும் இல்லாமல், விருப்பு வெறுப்பு இல்லாமல் திரும்பத் திரும்ப மனிதர்களை வேடிக்கை பார்த்துக் கொண்டிருக்கும்போது எல்லோருடைய வாழ்க்கையும் ஒன்றே என்பது புலப்படும். அப்பொழுது மனம் விசாலமாகும். எல்லா உயிர்களுக்கும், எல்லா ஜாதியாருக்கும், எல்லா மனிதருக்கும் குழந்தைப் பாசமும் பெண்கள் மீது பிரேமையும், தாய்ப்பாசமும் ஒன்றே என்பது புரியவரும்.

மனிதர்களைப் பார்க்கப் பார்க்க தன் வாழ்க்கை புரியும். இன்னொரு குடும்பத்தைப் பார்க்க தன் குடும்பத்தினுடைய நிலைமை புலப்படும். இன்னொருவர் முகத்தை உற்றுக்கவனிக்க தன் மனதின் செம்மை தெளிவாகும். தன்னைப் பற்றிய நினைப்பும் அறிவும் வர மற்றவரை உற்றுக்கவனித்தல் என்பது மிக முக்கியம். இப்படி மற்றவரை உற்றுக் கவனிக்கவே இந்தத் திருவிழாக்கூட்டங்கள். இதற்காகவே இறைவன் புறப்பாடு. இதுவே கோயில் என்பதன் பணி.

கோயில் என்பது இறைவழிபாடு மட்டுமல்ல. அது ஒரு சமுதாயக் கூடம்.

மக்களை ஒன்று சேர்க்கின்ற இடம். இப்படி உற்று கவனிக்கச் செய்வதன் மூலம் மனதை விசாலமாக்கி, வாரிவாரி வழங்குகின்ற தன்மையை ஏற்படுத்தி, எல்லோரும் மனிதர்கள்தான்; எல்லோருக்கும் எல்லோரும் உதவி செய்யத்தான் பிறந்திருக்கிறோம் என்ற பெருந்தன்மையை உள்ளுக்குள் ஏற்படுத்தி "எங்கள் ஊருக்கு வந்திருக்கிறீர்கள். இந்தாருங்கள் சோறு, இந்தாருங்கள் நீர் ,இந்தாருங்கள் படுக்கை" என்று கொடுத்து உபசரித்து விருந்தோம்பலை முக்கியமாக்கி இதனால் மனம் மென்மைப்பட்டு, மென்மைப்பட்ட மனதால் தன்னைப் பார்க்க, தனக்குள் இறைவன் இருப்பது தெரியும்.

இதோ பங்குனி மாதம் வரப்போகிறது. பங்குனி உத்திரவிழா, திருக்கல்யாண வைபவங்கள் நடைபெறுவதற்கு கோயில்கள் ஆயத்தமாகிக் கொண்டிருக்கின்றன, கோயில் விழாக்களில் பங்கு பெறுங்கள். மனிதர்களை வேடிக்கை பாருங்கள். எது வேடிக்கை பார்க்கிறது என்று உள்ளுக்குள் பாருங்கள். அப்பொழுது இறை என்பது என்ன என்று உங்களுக்கே புரியும். ★



## நந்தி கல்யாணம் பார்த்தால் முந்தி கல்யாணம்

பங்குனி மாதம் புனர்பூசம் நட்சத்திரத்தில் நந்திதேவருக்கும் சுயசாம்பிகை தேவிக்கும் ஒவ்வொரு ஆண்டும் திருமழபாடியில் மிகச் சிறப்பாகத் திருமணம் நடைபெறுகிறது.

நந்திதேவரும், சுயசாம்பிகை தேவியும் தம்பதி சமேதராக வீதி வலம் வரும் பொழுது மக்கள் தங்கள் வீடுகளையும் திருமண வீடுபோல் அலங்கரித்து சுவாமி ஊர்வலத்தை வரவேற்பது திருமழபாடியில் கண் கொள்ளாக் காட்சியாகும்.

"நந்தி கல்யாணம் பார்த்தால்
முந்தி கல்யாணம்"

என்ற பழமொழியால் தம் பக்தர்களுக்கும் திருமண வரம் அருளுவார் நந்திதேவர் என்பதை அறிந்து கொள்ளலாம்.



# கட்ட பொம்முவிடம் பதக்கம் கேட்ட செந்திலாண்டவர்

பாஞ்சாலங்குறிச்சியைத் தலைநகராகக் கொண்டு ஆண்ட நாயக்கர் மரபினரான கட்டபொம்மு மன்னர்கள், திருச்செந்தூர் முருகப் பெருமானைத் தம் குலதெய்வமாகக் கொண்டு வழிபட்டவர்கள் ஆவர்.

கட்டபொம்முவின் பரம்பரையினர் நாற்பத்தி எட்டுத் தலைமுறையினர் சுமார் 700 ஆண்டுகள் பாஞ்சாலங்குறிச்சியை ஆண்டுள்ளார்கள்.

இவர்களில் நாற்பத்தி ஏழாம் தலைமுறையில் வந்த வீரபாண்டிய கட்டபொம்மனே ''வானம் பொழிகிறது, பூமி விளைகிறது, உனக்கேன் கொடுப்பது கிஸ்தி'' என வரிகட்ட மறுத்து ஆங்கிலேயர்களுக்கு எதிராக மிகக் கடுமையாகப் போராடி, பானர்மேன் என்ற வெள்ளைத் தளபதியை எதிர்த்து வீரப்போர் புரிந்த மாமன்னன்.

அத்தகைய வீரத்தை வீரபாண்டிய கட்டபொம்மன் கொண்டிருந்தமைக்குக் திருச்செந்திலாண்டவர்பால் அவன் கொண்டிருந்த பெரும் பக்தியே காரணம் எனலாம்.

திருச்செந்திலாண்டவன் பால் அளவற்ற அன்பு பூண்ட வீரபாண்டிய கட்டபொம்மன், நாளும் திருச்செந்தூரில் உச்சிக்கால பூஜை ஆன பிற்பாடுதான் உணவருந்தும் விரதம் பூண்டவன்.

பாஞ்சாலங்குறிச்சிக்கும், அங்கிருந்து 40 மைல் தொலைவிலிருந்த திருச்செந்தூர் முருகன் கோயிலுக்கும் இடையே, அரைமைல் முக்கால் மைல் இடைவெளியிலே பல நகரா மண்டங்களை அமைத்திருந்தான் கட்டபொம்மன்.

ஒவ்வொரு நகராமண்டபத்திலும் ஒருபெருமுரசம், இரண்டு மூன்று பணியாட்களும் இருப்பார்கள்.

திருசெந்தூர் கோயிலில் உச்சிக்காலப் பூஜை நடைபெறும் போது சண்முக விலாசத்தில் அமைத்து வைக்கப்பட்டிருந்த பெருமுரசு முதலில் முழங்கும். அவ்வோசையைக் கேட்டு அடுத்த மண்டபத்திலுள்ள முரசைப் பணியாளர்கள் முழக்குவார்கள். அதைத் தொடர்ந்து ஏனைய முரசங்களெல்லாம் முறையே ஒன்றன்பின் ஒன்றாக முழக்கப்படும்.

இறுதியில் பாஞ்சாலங்கோட்டையின் முரசம் முழங்கும். செந்தில் கோயிலில் உச்சிக்காலப் பூஜை நடைபெற்ற செய்தி பாஞ்சைக்கு அரைமணி நேரத்தில் வந்துவிடும்.

அம்முரசு ஒலி கேட்ட பிறகே கட்டபொம்மனும் அவன் தேவி ஜக்கம்மாவும் முருகன் வழிபாட்டை முடித்துக் கொண்டு உணவுக்குச் செல்வர். இதுவே கட்டபொம்மனுடைய தினசரி வழக்கமாக இருந்து வந்துள்ளது.

இதற்காக கட்டபொம்மன் அமைத்திருந்த நகரா மண்டலங்களை இன்றும் ஆத்தூர், ஆறுமுகநேரி, வாகைக்குளம், பேரூரணி, கள்ளன் பறம்பு முதலான இடங்களில் காணலாம்.

கட்டபொம்மனின் தந்தை திக்குவிசயதுரை எனும் கட்டபொம்மு ஆவார். இவர் ஒருமுறை தம் மனைவி யாரோடும், பரிவாரங்களோடும் திருச்செந்தூருக்கு எழுந்தருளி வழிபாடு செய்தார். வழிபாட்டின் முடிவில் தம் மேனியை அலங்கரித்த பொன்னாபரணங்கள் பலவற்றையும் ''செந்தில் முருகனுக்குக் காணிக்கை'' எனத் திருக்கோயில் நிர்வாகிகளிடம் வழங்கினார். அவர்தம் மனைவியாரும் அவ்வாறே தம் பொன்னாபரணங்களை வழங்கிவிட்டார்.

பாஞ்சைக்குத் திரும்பிய மன்னன். தம் மனைவியின் பக்தியைப் பாராட்டி சிறந்த வைரக் கற்களைத் தருவித்து மிகுந்த விலை மதிப்புடைய ஓர் பதக்கமும், முத்து மாலையும் செய்து வழங்கினான்.

அன்றிரவில் திருச்செந்திலாண்டவர் கட்டபொம்முவின் கனவிலே தோன்றினார். ''அன்பனே! உன் அரசி அணிந்து கொண்டிருக்கும் பதக்கத்திற்கு எனது குறத்தியும் ஆசைப்படுகிறாள். ஆண்டியாக இருக்கும் நான் அவ்விலையுயர்ந்த பொருளுக்கு எங்கே போவேன்''. என்று கேட்டு மறைந்து விட்டார்.

கட்டபொம்மு மன்னன் தம் அரசியாரிடம் திருச்செந்தூர் முருகன் கனவில் வந்து கூறியதைக் கூற அப்பதக்கத்தைச் சுழற்றித் தந்து விட்டார் தேவியார். அதனை மறுநாளே வெள்ளிப் பேழையுள் வைத்து முருகனுக்குக் காணிக்கையாக்கி மகிழ்ந்தான் கட்டபொம்மு துரை.



# பங்குனி உத்திரத்தில் நடைபெற்ற பார்வதி - பரமேசுவரர் திருமணம்





ஏழில் மிக்க இமயமலை விண்ணளாவி நின்றது. அம்மலையில் தேவாமிர்தம் போன்ற நீருடைய ''பத்மை'' என்ற தடாகம் இருந்தது. அத்தடாகத்தருகில் அம்பிகை தனக்கு மகளாய்த் தோன்ற வேண்டும் என்று பர்வதராஜன் தவம் செய்தான்.

பார்வதராஜனின் தவத்திற்கு இரங்கிய அம்பிகை, ''பத்மை'' தடாகத்தில் பூத்திருந்த ஆயிரத்தெட்டுத் தாமரைப்பூவில் மரகத மேனியுடன் குழந்தையாய் அவதரித்தாள்.

தெய்வக் குழந்தையைக் கண்ட இமவான் ''தன் தவம் பலித்தது'' என்று ஆனந்தக் கூத்தாடினான். ''இது எம்பெருமான் தந்த பிரசாதம்'' என்று குழந்தையை வாரி எடுத்து அணைத்துத் தம் மனைவியான மேனையின் கரத்தில் கொடுத்து வளர்த்தான்.

பர்வதராஜனின் மகளாக அவதாரம் செய்த படியால் குழந்தைக்குப் ''பார்வதி'' என்று பெயர் இடப்பட்டது.

பார்வதி தேவிக்கு ஐந்து வயதானது. தந்தை தாயை நோக்கி ''அப்பா!அம்மா! நான் மணிகண்டப்பெருமானை மணம் செய்து கெள்ள வேண்டும் .அதற்காக தவம் செய்யப்போகிறேன். தவச்சாலை அமைத்துக்கொடுங்கள்" எனக்கேட்டது.

பார்வதி வேண்டியபடியே தவச்சாலை அமைத்துக் கொடுத்தான் பர்வதராஜன். ''சிவ சிவ'' என்று சிவபெருமானை மனம், மொழி, மெய்களால் பார்வதி வழிபட்டுத் தவம் புரிந்தாள்.

பார்வதி மிகக் கடுமையாகத் தவம் புரிய , கிழ அந்தணராக வேடம் கொண்டு சிவபெருமான் தவச்சாலைக்கு எழுந்தருளினார்.

''பார்வதி! மாலும் அயனும் காயணமுடியாத சிவபெருமான் உன் தவத்துக்கு இரங்கி வருவாரோ? மாட்டார்! தவத்தை கைவிடும்" என்றார் கிழவேதியர்.

"சிவபெருமானைக் காணும் வரை தவம் புரிவேன். உயிர் பிரிந்தாலும் கவலையில்லை. பஞ்சாக்கினி நடுவே நின்று தவம் புரிவேன். ஆயிரமாயிரம் பிறவிகள் எடுத்துத் தவம் புரிவேன் அன்றித் தவத்தைக் கை விட மாட்டேன்'' என்று வைராக்கியத்துடன் கூறினாள் பார்வதி.

பார்வதியின் தவ உறுதி கண்ட சிவபெருமான் கணங்கள் சூழ்ந்து துதிக்க ரிஷப வாகனத்தில் காட்சி கொடுத்து ''உம்மைத் திருமணம் புரிவோம்'' என்று கூறியருளினார்.

சப்தரிஷிகளை வரவழைத்து இமவானிடம் அனுப்பித் . திருமணத்திற்கு நாள் குறித்தார் சிவபெருமான். பார்வதியை மணம் புரிய பரமேஸ்வரன் குறித்த முகூர்த்த நாள்தான் பங்குனி உத்திரம்.

பங்குனி உத்திர நன்னாளில் பர்வதராஜனின் தலைநகரான ஔஷதிப்பிரஸ்தம் இந்திரலோகம் போல் தேவ தச்சரால் அலங்கரிக்கப்பட்டது .

பதினாயிரம் யோசனைப்பரப்பில் ஒரு புரிசையை உண்டாக்கி அதன் நான்கு வாயில்களிலும் நான்கு கோபுரங்கள் அமைத்து மையத்தில் செம் பொன்னால் திருமண மண்டபம் அமைத்தான் தேவதச்சன்.

தேவர் கூட்டங்களும் முனிவர்களும் இமய மலையில் எள்விழ இடமின்றிக் கூடினர். பார்வதி-பரமேஸ்வரர் திருமண வைபவம் காண, எல்லாப் புவனங்களில் உள்ளவர்களும் வந்து கூடினபடியால் பூமியின் வடகோடு தாழ்ந்து, தென்கோடு உயர்ந்தது .

தேவர்,முனிவர் யாவரும் அதனைக் கண்டு அஞ்சி சிவபெருமானிடம் பிரார்த்திக்க , அகத்திய முனிவரை வரவழைத்து ''தென்னாட்டில் உள்ள பொதிகை மலைக்குச் செல்" எனப் பணித்தார் சிவபெருமான்.

"அடியேன் என்ன குற்றம் செய்தேன்? தங்கள் திருமணக் காட்சியை யான் காண வேண்டாமா?" என்று

**மாப்பிள்ளை காலை மாமனார், மாமியார் கழுவுவதேன்?**

பார்வதி-பரமேஸ்வரர் திருமணத்தின் போது, ஹிமனையும், பர்வதராஜனும் கமண்டலத்து நீரால் பரமேசுவரருடைய திருவடிகளை நீராட்டி, மலரால் அருச்சனை செய்து, சந்தனம் மாலை சாத்தி, வரபூஜை செய்தார்கள்.

நம்முடைய நாட்டில் நடைபெறும் இந்துத் திருமணங்களிலும் மணமக்களையே உமா மகேஸ்வரர்களாகப் பாவித்து, மாப்பிள்ளையை விட பெரியவராகிய மாமனாரும், மாமியாரும் அவர் காலைக் கழுவி வணங்கும் சடங்கு நிகழ்த்தப் பெறுகின்றது.

இந்தப் பழக்கம் பார்வதி - பரமேஸ்வரர் திருமணத்திலிருந்து உண்டான பழக்கமாகும்.

அகத்தியர் முறையிட்டார். "பொதியை மலையில் இருந்தவாறே எம் திருமணத்தைக் காண்பாய்" என்று திருவருள் புரிந்தார் சிவபெருமான்.

அரம்பையர் ஆடினர், சித்தர்களும், கந்தர்வர்களும் தும்புரு நாரதரும் இசைபாடினர். அப்போது பிரம தேவன் சிவபெருமானை வணங்கி ''சர்வ லோக நாயகராகிய தேவரீர்! அடியேன் சாஸ்திரோத்தமாகத் திருக்கல்யாணம் நடத்தி வைக்க அனுமதி தரவேண்டும்'' என்று வேண்ட முக்கண்ணர் முறுவல் செய்து அதற்கு அனுமதித்தார்.

பிரமதேவர் புரோகிதராக அமர, மஞ்சள் பிள்ளையார் பிடித்து வைக்காமல் சாட்சாத் விநாயகரே அங்கு வந்து அமர்ந்தார். மணவினைச் சடங்குகள் இனிது முடிய, உலகை எல்லாம் கைவிடாது காக்கும் அகிலாண்ட நாயகியை எம்பெருமான் கைப்பற்றினார்.

இவ்வாறு மகோன்னதமாய் பார்வதி பரமேஸ்வரர் திருமணம் நடைபெற்ற மகத்தான நாள்தான் பங்குனி உத்திரத்திருநாள்.

அந்நாளே ரதி மன்மதனை மீளவும் பெற்ற திருநாள்.

அகத்தியர், பார்வதி-பரமேஸ்வரர் திருமணத்தைத் தென்பொதிகையில் கண்ட திருநாள்.

பங்குனி உத்திரப் பொன்னாளில் பார்வதி-பரமேஸ்வரர் திருமணம் நிகழப்பெற்ற வைபவத்தை நினைவு கூரவே இன்றும் பங்குனி உத்திரத் திருநாளில் திருக்கோயில்களில் திருக்கல்யாண வைபவம் நடைபெறக் காணுகிறோம். ★

# அவள் இவள் நல்லூர்



திருமுறைத் தலங்களுள் அவளிவள் நல்லூர் என்பதும் ஒன்றாகும். இப்பெயரிலேயே ஒரு சுவையான வரலாறு மறைந்திருக்கக் காணலாம்.

ஆதிசைவ அந்தணர் ஒருவருக்கு இரண்டு பெண்கள். மூத்த பெண்ணை அந்தணர் ஒருவருக்கு மணம் முடித்துக் கொடுத்தார். மணந்து கொண்டவர் கொஞ்ச நாள் கழித்துக் காசியாத்திரை சென்றார்.

அவர் காசியாத்திரை சென்றபோது மூத்த பெண்ணுக்கு அம்மை வார்த்து அவள் உருவமே மாறிப்போனது; அவள் கண்ணொளியும் இழந்தாள்.

சில ஆண்டுகள் கழித்து, காசியாத்திரை சென்றிருந்த மருமகன் வீடு திரும்பினார். தன்மனைவியின் சகோதரியான இளையவளைப் பார்த்து "இவளே என் மனைவி, மூத்தவர் வேறு யாரோ'' என்று வாதிட்டார்.

மனங்கலங்கிய ஆதிசைவர் இறைவனைப் பிரார்த்தித்துத் தம் மருமகனார் குழப்பத்தைத் தீர்த்தருளுமாறு வேண்டிக் கொண்டார்.

ஆதிசைவரின் வேண்டுகோளுக்கு இணங்க இறைவரும் காட்சி தந்து மனம் தடுமாறிய மருமகனைப் பார்த்து மூத்தவளே அவர் மனைவி எனும் பொருளில் ''அவளே இவள்'' என்று சுட்டிக் காட்டி மறைந்தார்.

இறைவனார் மூத்தவளை இத்தலத்துத் தீர்த்தத்தில் மூழ்கி எழுமாறு பணிக்க, அவளும் தீர்த்தத்தில் மூழ்கிப் பண்டைய உடல் வனப்பும் பெற்றதுடன் கண்ணொளியும் பெற்றாள். மருமகனும் தன் மனைவியுடன் மனம் மகிழ்ந்து வாழலுற்றான்.

இவ்வற்புதம் நிகழ்ந்த இத்திருத்தலம் ஆண்டவன் ''அவளே இவள்'' என அறிவுறுத்தியபடியால் ''அவள் இவள் நல்லூர்'' எனும் பொருளில் 'அவளிவணநல்லூர்' என வழங்கி வருகின்றது.

சோழநாட்டுத் தென்கரைத் தலங்கள் 127 இல் நூறாவது தலம் இத்திருத்தலம் ஆகும். சாட்சி கூறி உண்மை உணர்த்திய இறைவர் திருப்பெயரும் ''சாட்சி நாதர்'' எனவே வழங்கி வருகின்றது. அம்பிகை திருநாமம் சௌந்தரநாயகி.

# தமிழ்நாட்டுச் சித்தர் பரம்பரை

முனைவர். இரா.செல்வக்கணபதி, எம்.ஏ.பி.எச்.டி.

## 2. மச்சேந்திரர்

தமிழ்நாட்டுச் சித்தர்களை "நவநாத சித்தர்கள்" என்றும், "பதினெண் சித்தர்கள்" என்றும் தொகைப்படுத்திக் குறிப்பது வழக்கம். நவநாதசித்தர் பட்டியலில் ஆறாவதாக மச்சேந்திரநாதர் என்ற பெயரில் மச்சேந்திரர் குறிக்கப்படுகிறார். இவரே பதினெண் சித்தர்கள் பட்டியலில் பதினோராமவராக மச்சமுனி என்று சுட்டப்படுகிறார்.

மச்சேந்திரர் சித்தர் தலைவராகிய போகரின் மாணாக்கருள் ஒருவர். செம்படவர் மரபினர். இவர் இயற்றியனவாகத் தமிழில் திவாகரம் 800, வைத்தியம் எண்ணூறு எனும் இரு நுல்கள் கிடைத்துள்ளன. சித்தர் மரபில் வரும் சுந்தரானந்தர், நந்தீசர் முதலியோர் மச்சேந்திரரோடு ஒரு சாலைமாணாக்கர்களாகப் போகரிடம் பயின்றனர் என்று தெரிய வருகிறது.

'சித்தம் போக்குச் சிவம் போக்கு' என்பது தமிழ் நாட்டில் வழங்கி வரும் ஒரு பழமொழி. உமையையும் பிற தெய்வங்களையும் சித்தர்கள் ஒரோ வழி பாடிப் பரவியுள்ளனர். என்றாலும் தமிழ்நாட்டுச் சித்தர்கள் சிவநெறி நின்று ஒழுகியவர்கள் என்பதே முன் குறித்த பழமொழியின் உண்மைப் பொருள்.



சிவனருள் பெற்று படைத்தல் முதலிய ஐந்தொழில்களையும் நிகழ்த்திய ஆற்றல் மிக்க சிவனடியார்களாக அன்னார் திகழ்ந்தனர். உருவ வழிபாட்டையும் சமயச்சடங்குகளையும் சித்தர்கள் பெரிதாகப் போற்றிலர். எனவே, இவர்கள் சமய அருளாளர்களிடமிருந்து வேறு பிரித்து எண்ணப்பட்டனர். சித்தர் கண்ட நெறி சிவ நெறியே என்பது சித்தர் நூல்களால் அறிய வருகின்றது.

மதுரையில் எல்லாம் வல்ல சித்தராக சிவன் எழுந்தருளி வந்து சித்தாடல் நிகழ்த்தியதைத் திருவிளையாடல் புராணம் விரித்துரைக்கிறது. ஒரு வகையில் "சித்தத்தைச் சிவன்பால் வைத்தவர்கள்", என்று சுந்தரமூர்த்தி சுவாமிகள் குறிக்கும் தொகையடியார் குறிப்பு, சித்தமரபினரைத் தொகுத்துரைத்த ஒரு குறியீடாகவே அமைகிறது. ஒன்பதாம் திருமுறையில் இடம் பெற்றுள்ள கரூவூராரைச் சித்தராகப் போற்றும் மரபும் நிலவுகிறது.

தமிழ்நாட்டுச் சித்தர்கள் வரலாறுகள் குறித்த முறையான ஆய்வுகள் இதுகாறும் நிகழ்த்தப் பெறாமை பெருங்குறை. எல்லாம் செவி வழிச் செய்திகளின் பதிவாகவே நிற்கின்றன. சித்தர் பாடல்கள் பதிப்புகள் பலவும் குறைபாடு மிக்கனவாகவே அமைந்துள்ளன. 20 ஆம் நூற்றாண்டில் சித்தர் பாடல்களோடு, பலர் தங்கள் சொந்தப் பாடல்களையும் எழுதி இணைத்த அவலங்களும் உண்டு. இக்கட்டுரை ஆசிரியரால் பெரிது முயன்று, தகவல்கள் திரட்டப்பட்டு ஒப்பாய்வு நிகழ்த்தி கோரக்கர் மற்றும் காகபுஜண்டர் வரலாறுகள் வெளிக் கொணரப்பட்டன. மச்சேந்திரர் திருப்பரங்குன்றத்தில் ஜீவ சமாதி அடைந்ததாகவும் இவர் ஆடித்திங்கள் உரோகிணி நாள் முதல் பாதத்தில் அவதரித்தவர் என்றும் சித்தர் களஞ்சியம் என்ற தொகுப்பு நூலில் குறிப்புகள் காணப்படுகின்றன.

ஒரு முறை சிவபெருமான் ஒரு கடற்கரை

அருகில் இருந்தவாறு உமையம்மைக்குத் தாரகமந்திரத்தை உபதேசித்தார். அக்காலை கடல் மீன் ஒன்றன் வயிற்றில், முட்டைக்குள் இருந்த மீன் குஞ்சும் சிவன் உபதேசித்த தாரகத்தைக் கேட்டுக் கொண்டிருந்தது. அம்மை சற்றே கண் அயர்ந்தார், கண்ட சிவன், தாரகத்தின் பெருமை அறியாதவர்போல் நீ உறங்கினை. அதன் பெருமையைப் பார்" என்று உமையிடம் கூறிவிட்டு, கரு உற்றிருந்த மீனைக் கருணையோடு நோக்கினார். மீன்வயிற்றிலிருந்து அழகிய ஆண் குழந்தை ஒன்று வெளிப்பட்டு அம்மை அப்பரை வணங்கி நின்றது. சிவன் அக்குழந்தைக்கு மச்சேந்திரன் என்று பெயர் சூட்டினார். "நாடெங்கும் சென்று நமது நெறிபரப்பி சித்தாடி மக்கள் துயர்தீர்த்து வருக என்று அருள்பாளித்தார்". மச்சேந்திரர் தோற்ற வரலாற்றை அபிதான சிந்தாமணி இவ்வாறு எடுத்துரைக்கிறது.

மீன் வயிற்றில் தோன்றிச் சிவபரம்பொருளின் பரமகருணையைப் பெற்று மச்சேந்திரர் ஓயாது உணர்ந்த சிவஞானம் கை வரப்பெற்றார். அம்மை அப்பர் நினைவோடு நாடெங்கும் சுற்றித் திரிந்தார். மலை முகடுகளிலும் காடுகளிலும் கடுந்தவம் புரிந்தார். சிவனருளால் அழியாத திருமேனியும், இரும்பைப் பொன்னாக்கும் இரசவாதமும், மக்கள் நோய்தீர்க்கும் மருத்துவத்திறமும், அளவற்ற சித்துக்களும் கைவரப் பெற்றார். உலகத்தார் கண்களுக்குத் தம்மை அடையாளம் காட்டிக் கொள்ளாது தாம் இருக்குமிடம் தேடி வந்து எவரேனும் அன்னமிட்டால் உண்டு. சிவஞானியாக சிவயோகியாக சிவ சித்தராக மச்சேந்திரர் வாழ்ந்திருந்தார்.

ஒரு முறை மச்சேந்திரர் கொல்லி மலை விடுத்துப் பொதியமலைக்குப் புறப்பட்டார். வழியில் சம்பல் பட்டி என்ற சிற்றூரில் வாழ்ந்திருந்த சிவராம தீட்சிதர் என்பாரின் மனக் குறையை நீக்க அவர் துணைவிக்குத் திருநீறு அளித்து அவள் அதனைக் குப்பையில் வீசக் குப்பை மேட்டிலிருந்து ஒரு குழந்தையை வரவழைத்துச் சித்தாடல் நிகழ்த்தினார்.

மச்சேந்திரருடைய மாணாக்கருள் முதன்மையானவர் கோரக்கர். கோரக்கருக்கு உபதேசித்த பின் வடநாடு சென்று பல ஆண்டுகள் தங்கித் தவமியற்றிப் பின்னர் மலையாள நாடு திரும்பினார். மச்சேந்திரரின் சித்தாடல் கண்டு மயங்கிய மலை நாட்டு இளவரசி பிரேமளா என்பாள் அவரை விரும்பி மணம் பூண்டார். அவர்கள் இல்லறத்தில் 'மீனநாதன்' பிறந்தான். தம் ஞானாசிரியரை இல்லறக் கட்டுக்களிலிருந்து வெளிக் கொணரக் கோரக்கர் பலவாறு முயன்று இறுதியில் வெற்றி பெற்றார்.

மச்சேந்திரர் 300 ஆண்டுகளும் 62 நாள்களும் இப்பூவுலகில் வாழ்ந்திருந்தார் என்ற ஒரு குறிப்புக் காணப்படுகிறது.

ஆங்கிலத்தில் திரு குப்தா என்ற பஞ்சாப் பகுதியைச் சேர்ந்த ஆசிரியர் ஒருவரால் "மச்சேந்திரர் - கோரக்கர் உரையாடல்" என்ற நூல் வெளியிடப்பட்டுள்ளது. இந்நூல் வேதாந்தத் தத்துவ ஆய்வாக நடையிடுகிறது.

மச்சேந்திரரின் "திவாகரம் எண்ணூறு" பல்வேறு சித்தர் நெறிகளை விடுத்துரைத்து நிறைகிறது.

இவரது "வைத்தியம் எண்ணூறு" போகர் நெறிமுறையில் வந்த அரிய சித்த மருத்துவக் குறிப்புகளை வழங்குகின்றன.

சித்தர் சிலர் இல்லற நெறியிலும் வாழ்ந்திருந்தனர் என்பது மச்சேந்திரர் வரலாற்றால் உணர முடிகிறது.

இனி வரும் ஆய்வுகளால் மச்சேந்திரர் வரலாறு மேலும் ஒளிபெறும் என்று நம்பலாம். ★

## வாழ்வு மலர வரமருளும் திருச்செந்தூர்



செந்திலாண்டவர் தம் தந்தையரான சிவபெருமானைத் தினந்தோறும் பூஜை செய்து வழிபடுவார்.

தேவலோக மலர்களைக் கையில் வைத்துக் கொண்டு பரமேஸ்வரரைப் பூஜை செய்யும் போது திருமாலும், பிரம்மாவும், இந்திரன் உள்ளிட்ட தேவர்களும் வந்து முருகப் பெருமானின் பூஜையைக் கண்டு பரவசப் படுகிறார்கள். அப்போது சிவபெருமானுக்குச் சாற்றுகிற புஷ்பத்துடன் திரும்பித் தேவர்களுக்குக் காட்சிக் கொடுக்கிறார்.

செந்திலாண்டவர் கையிலே மலர் உண்டு. வேறு எந்தத் தலத்திலும் இந்தத் தன்மை கிடையாது. மற்ற தலங்களில் கையிலே வேல் வைத்திருப்பார். திருச்செந்தூரில் மலர் வைத்திருக்கின்றார்.

''பக்தர்களே! உங்கள் வாழ்க்கையை மலர வைக்கின்றேன்'' என்று உறுதி கூறும் வகையில் திருச்செந்தூர் முருகன், கையில் மலர் வைத்திருக்கக் காணலாம் திருச்செந்தூரிலே.

# கல்வி வரம் அருளும் செட்டி புண்ணியம் அருள்மிகு அயக்கிரீவர்

**ஆர். பிச்சுமணி**
வங்கிபுரம்

இருள் தருமா ஞாலத்தில் பிறந்து, துயரங்களை அனுபவித்து வரும் ஜீவ ஆத்மாக்களுக்கு உள்ள காலம் வரையில் இந்த சம்சார சாகரமாகிய துன்பத்தினின்றும் மீண்டு அந்தமில் பேரின்பத்தை அடைய நல்ல வழி, கல்வியும் பெரியோர்களுடைய உபதேசங்களுமே ஆகும்.

நல்ல கல்வி பெற எம்பெருமானுடைய அருளும், பெரியோர்களுடைய ஆசியுமே தேவை. நல்ல கல்வி பெறுவதற்கு ஸ்ரீ யோக ஹயக்ரீவருடைய திவ்ய கடாட்சமே உதவும்.

நல்ல கல்வி அறிவு பெற நம்மை ஆசீர்வதித்து நல்ல ஞானத்தை அளிப்பதற்குக் காத்திருக்கிறான் எம்பெருமான்.



எங்கே என்று அறிந்து கொள்ள ஆர்வமாக இருக்கிறது அல்லவா! சென்னை - செங்கல்பட்டு நெடுஞ்சாலையில் சிங்கப்பெருமாள் கோயிலிலிருந்து சுமார் 4 கி.மீ. தூரத்திலிருக்கும் செட்டிபுண்ணியம் கிராமத்தில் பல ஆண்டுகளாக கல்விக்கு அதிபதியாக ஸ்ரீ யோக ஹயக்ரீவரும், திருமங்கை மன்னனால் பாடப்பெற்ற தேவநாதனும் அருள்பாலித்து வருகின்றனர்.

கல்விக்கு அதிபதியான ஸ்ரீ யோக ஹயக்ரீவரும், பிரயோக சக்கரத்துடன் உள்ள தேவநாதனும் அயிந்தை நகரிலிருந்து இந்த கிராமத்திற்கு வந்ததாக ஐதீகம்.

இந்தக் கிராமத்திற்கு எம்பெருமான் தேவநாதனையும், ஸ்ரீ யோக ஹயக்ரீவரையும் வழிநெடுக 56 நாட்கள் அங்கங்கு, நித்யப்படி பூஜை செய்து கொண்டு வந்து 1848 ஆம் ஆண்டு வைகாசி மாதத்தில் செட்டிபுண்ணியம் திருக்கோயிலில் எழுந்தருளச் செய்யப்பட்டார். சன்னதியில் இருக்கும் சக்கரவர்த்தி திருமகன் (ஸ்ரீராமன்) தஞ்சை அரண்மனையில் பணி புரிந்த செட்டிபுண்ணியம் கிராம வாசியான முடும்பை இராமசாமி ஐயங்கார் என்பவர் முயற்சியால் இங்கு எழுந்தருளச் செய்யப் பெற்றார்.

வேகமாக வளர்ந்து வரும் எதிர்காலத்திற்கு நவீன கல்வி முறையே உபயோகமாக இருக்கும் - 64 கலைகளும் (கம்யூட்டர் உள்பட) ஸ்ரீ யோக அயக்கிரீவர் அருளினால் தான் மாணவர்களுக்குக் கிடைக்கும். எல்லா மாணவர்களும் தங்கள் கல்வி அறிவை நிறைய பெற அவசியம் ஸ்ரீ யோக ஹயக்ரீவரை தரிசனம் செய்ய வேண்டும்.

அறநிலையத்துறையின் கீழ்வரும் இந்த ஆலயமானது நில புலன்கள் யாவும் நன்றாக பராமரிக்கப்பட்டு இரண்டு வேளை பூஜை சிறப்பாக நடைபெறுகிறது.

கோவிலில் இருக்கும் அழிஞ்சல் மரமானது (நாச்சியார் திருமொழியில் 44வது பாசுரத்தில் இந்த மரத்தினுடைய விஷேசத்தைக் காணலாம்) சேவார்த்திகளுடைய மனத்திலுள்ள குறைகளைப் போக்கி நல்லன செய்வதைப் பக்தர்கள் கண் கூடாய்ப் பார்க்கலாம். அவசியம் எல்லோரும் வேதாந்த தேசிகரால் துதிக்கப்பட்ட ஸ்ரீ தேவநாதனையும், யோக ஹயக்ரீவரையும் வணங்கி பயனடைய வேண்டும். ஆயிரக்கணக்கான மக்கள் வந்து வணங்கி மங்கலகரமான வாழ்க்கையைப் பெறுகிறார்கள்.

இந்தக் கிராமத்தை சேர்ந்த வீரவல்லி நரஸிம்மாச்சார்லு (1831-1883) முதல் மைசூர் திவான் என்பது குறிப்பிடத்தக்கது. முடும்பை ரங்காச்சாரி ஸ்வாமிகள், மச்சங்குப்பம் ஜில்லா சிரஸ்தாராக இருந்த காலத்தில் இந்த ஸ்ரீ தேவநாதப் பெருமானையும், ஸ்ரீ ஹயக்ரீவரையும் தம் கிராமத்திற்கு எழுந்தருளப் பண்ணியதாக அறிகிறோம். ★

உக்கிரபாண்டியன் செங்கோல் தவறாமல் ஆட்சி செய்து வருகையில் கோள் நிலை பிறழ்ந்தமையால் மழை பெய்யவில்லை. சேர, சோழ, பாண்டிய நாடுகள் வறுமையில் வாடின. அதுகண்ட மூவேந்தரும் தம் வறுமையை நீக்கக் கருதி அகத்தியர் வாழும் பொதிய மலையை அடைந்தனர்.

மூவரும் அகத்தியரிடம் மழை இன்மையால் தங்கள் நாட்டிற்கு ஏற்பட்ட வறுமை நிலையை எடுத்துக் கூறினர். அகத்தியர் கிரகங்கள் நிற்கும் நிலையை ஆராய்ந்தார். பின்னர் மூவேந்தரை நோக்கி, ''இனியும் மழை பெய்யாது. நீங்கள் மழையைப் பொழிவிக்கும் இந்திரனிடம் சென்று இதனைக் கேளுங்கள்'' என்றார்.

தமிழ்வேந்தர் மூவரும் அகத்தியரை நோக்கி, ''யாம் இந்திரனைக் காண விண்ணுலகிற்கு எவ்வாறு செல்வது?'' என்று கேட்டனர். ''நீர் சோமவார விரதம் அனுஷ்டித்து சிவபெருமானின் திருவருளைப் பெற்று விண்வழியாகச் செல்வீராக'' என்றார். அத்துடன் சோமவாரவிரதம் நோற்கும் முறையையும் கூறினார். அவ்விரதத்தின் வகைகளையும், அதனை முடிக்கும் முறைகளையும் பயனையும் கூறினார்.

இதனைக் கேட்டுத் தெரிந்து கொண்ட வேந்தர் மூவரும் அவரிடம் விடைபெற்று மதுரையை அடைந்தனர். அவ்வாறே விரதம் நோற்று இந்திரன் உலகம் அடைந்தனர். மூவேந்தரும் வருவதை அறிந்த இந்திரன் அம்மூவருக்கும் தன்னைவிடத் தாழ்ந்த நிலையில் அமரத்தக்க மூன்று சிங்காதனங்களை இடுவித்தான்.

சேரனும் சோழனும் இந்திரன் காட்டிய அச்சிங்காதனங்களில் அமர்ந்தனர். உக்கிரவழுதி மட்டும் இந்திரனுடைய சிங்காதனத்தில் ஏறி அவனோடு சமமாக அமர்ந்தான். அதனால் இந்திரன் உக்கிர வழுதி மீது பொறாமை கொண்டான்.

# திருவிளையாடல் புராணம்

**இரா. அரங்கசாமி**



அருகில் இருந்த சேரனையும், சோழனையும் நோக்கி முகமன் கூறி, ''நீங்கள் வந்த காரியம் யாது?'' என்று கேட்டான். அவர்கள் இந்திரனை நோக்கி, ''மகபதியே! எங்கள் நாட்டில் மழை இல்லை. அதைப் பெற வேண்டி இங்கு வந்தோம்'' என்றனர். இந்திரன் மனமகிழ்ந்து இரத்தினாபரணங்களையும், பொன்னாடைகளையும் கொடுத்து, அவ்விருவர் நாடுகளில் மட்டும் மழை பெய்யும் படி அருளினான். பின்னர் ''நீவிர் செல்லுங்கள்'' என்று விடை கொடுத்து அனுப்பிவைத்தான்.

அவ்விருவரும் சென்ற பின்னர் இந்திரன், தனக்குச் சமமாகச் சிங்காதனத்தில் வீற்றிருக்கும் உக்கிரபாண்டியன் பொருட்டு ஒரு சூழ்ச்சி செய்ய

எண்ணினான். அவன் மழை வேண்டாமல் இருக்கும் பெருமிதத்தை எண்ணி அளவில்லாத கிங்கரர்களால் தாங்கி வரப்பெற்ற ஒரு பெரிய முத்துமாலையை அவனுக்குப் பரிசாகக் கொடுத்தான்.

சங்காரத்தம், துரோணம், காளமுகி என்னும் நான்கு மேகங்கள் அப்பொதியமலையின் மேல்விழுந்து மேய்ந்து கொண்டிருந்தன.

அதனைக் கண்ட பாண்டியன் உடனே அவற்றைப் பிடித்து யானைகளைத்



தளையிடுவதைப் போல அம்மேகங்களை விலங்கிட்டுப் பிடித்துச் சிறைச்சாலையில் கொண்டுபோய் அடைத்தான். இதனை அறிந்த இந்திரன் கோபம் கொண்டு போரிடக் கருதிப் புறப்பட்டு வந்தான்.

உக்கிரபாண்டியனோ அதனை வாங்கி மலர்மாலைபோலத் தன் கழுத்தில் அணிந்து கொண்டான். அதனைக் கண்டு இந்திரன் பெருவியப்படைந்தான்.

அவன் பாண்டியனை நோக்கி ''பாண்டியனே! இன்று முதல் "ஆரம் தாங்கிய பாண்டியன்" என்று உலகமெல்லாம் உன்னை நன்கு மதிப்பதாக'' என்று புகழ்ந்து கூறினான். உக்கிரபாண்டியன் அப்புகழ்ச்சியைச் சிறிதும் பொருட்படுத்தாது அவ்வரியணையில் இருந்து இறங்கித் தனது மதுரை நகரை அடைந்தான்.

இந்திரன் ஆணையால் சேர சோழ நாடுகளில் மழை பெய்தது. பாண்டிய நாடு மட்டும் முன்போலவே மழையின்றி வறுமையில் இருந்தது. ஒருநாள் உக்கிரபாண்டியன் பொதியமலையை அடுத்த, சந்தன மரங்கள் அடர்ந்த சாரலை அடைந்து அங்குள்ள மிருகங்களைவேட்டையாடிக் கொண்டிருந்தான். அப்பொழுது புட்கலாவருத்தம்,

பாண்டியனின் வீரர்களும், இந்திரன் கட்டளையால் தேவர்களும் ஒன்று கலந்து போரிட்டனர். இந்திரனும் பாண்டியனும் நேர்நின்று போரிட்டனர். மாறி மாறி இருவரும் கணைகளை விட்டனர். முடிவில் பாண்டியன் விட்ட திகிரிப்படை இந்திரனுடைய முடியைக் கீழே தள்ளிச் சிதைத்தது. இந்திரன் புறங்கொண்டு ஓடினான்.

"உக்கிரபாண்டியன் வீசிய வளையானது என் தலையினைச் சிதையாமல் என் முடியினை மட்டும் சிதைத்தது. அதற்குக் காரணம் நான் முன்னர் சோமசுந்தரக் கடவுளைப் பூசை செய்ததே ஆகும்" என்று எண்ணி, சிவபெருமான் திருவருளைப் பாராட்டினான்.

உக்கிரபாண்டியன் அகத்திய முனிவர் தனக்குக் கூறியருளிய சோமவார விரதத்தைத் தொடர்ந்து கடைப்பிடித்து வந்தான். அதன் பயனாக காந்திமதியின் வயிற்றில் ஓர் சற்புத்திரன் தோன்றினான். புத்திரன் பிறந்தவுடன் பெருமகிழ்ச்சி அடைந்த மக்கள் அந்த நாளைத் திருநாளாகக் கொண்டாடினர். உக்கிர பாண்டியன்



**பிறரிடம் கொடுக்கக் கூடாத பொருட்கள்**

புத்தகம், பெண், பணம், நகை - இவற்றைப் பிறரிடம் கொடுத்தால் திரும்பவராது. ஒருவேளை திரும்ப வருமாயின் புத்தகம் கிழிந்தும், பெண் மாசு படிந்தும், பணம், நகை அளவு குறைந்தும் தான் வரும்.

## எட்டு யோகங்கள்



1. மனைவி (வாழ்க்கைத் துணை)
2. மக்கள்
3. உறவினர்கள்
4. பொருள்கள்
5. நல்ல பணியாள்
6. வாகனங்கள்
7. தனம்
8. தானியம்

தன் செல்வனுக்கு வீரபாண்டியன் என்று பெயரிட்டான். வீரபாண்டியன் பல கலைகளையும் கற்றுத் தேர்ந்தான். அக்காலத்தில் கிரகங்களின் நிலைமாற்றத்தால் மழைவளம் குறைந்தது. பஞ்சம் ஏற்பட்டது. பாண்டியன் சோதிடர்களை அழைத்தான். மழைவளம் குறைந்ததற்குக் காரணம் என்ன? என்று வினவினான். அதற்குச் சோதிடர்கள் ''மற்ற கிரகங்கள் சூரியனை நோக்கி நிற்றலால் ஒரு வருடம் வரை மழை பெய்யாது'' என்று கூறினர். அதைக் கேட்டு வருந்தினான் உக்கிரபாண்டியன். சோமசுந்தரக் கடவுளிடம் முறையிட்டான். இறைவன் ஒன்றும் கூறாமையால் பாண்டியன் தன் அரண்மனையை அடைந்தான்.

பகற்பொழுது மறைந்தது. பாண்டியன் நித்திரை செய்து கொண்டிருந்தான். அப்போது அவன் கனவில் இறைவன் சித்தமூர்த்தியாகத் தோன்றி, ''பாண்டியனே! இப்போது மழை பெய்யாது. அதனால் நீ வருத்தம் அடையாதே! மேருமலையின் அருகிலுள்ள குகையில் அளவற்ற செல்வம் உள்ளது. நீ அங்கே சென்று அதன் செருக்கு அடங்கும் வகையில் அந்த மேரு மலையைச் செண்டால் அடித்து, பாறையை உடைத்து நீ வேண்டுமளவு பொன்னை வாரி எடுத்துக் கொண்டு, அவ்வறையை அடைத்து உனது இலச்சினையை அதன்மீது இட்டு வருவாயாக'' என்று திருவாய் மலர்ந்தருளினார்.

உக்கிரபாண்டியன் கண் விழித்து எழுந்தான். அன்றாடக் கடமைகளை முடித்தான். சோமசுந்தரப் பெருமானை வலம் வந்து வணங்கினான். தனது நால்வகைச் சேனையுடன் கீழ்த்திசை நோக்கிப் புறப்பட்டான். முரசுகள் முழங்கின. சங்கங்கள் ஒலித்தன. இசைக் கருவிகள் ஆர்த்தன. வேதியர்கள் ஆசிகூற, புலவர்கள் புகழ்ந்து பாட உக்கிரபாண்டியன் தேரில் ஏறி அமர்ந்தான்.

உக்கிரபாண்டியன் பல நாடுகளைக் கடந்து செல்லும்போது காசி நகரில் கங்கையில் நீராடி அருள்திரு விசுவநாதப் பெருமானை வணங்கிப் பல கண்டங்களையும் கடந்து சம்பு நதி பாயும் இளாவிருத கண்டத்தை அடைந்தான். அங்குள்ள காடுகளின் அழகைக் கண்டு அதிசயித்தான். பின்னர் மேருமலையை வலம் வந்தான். உடனே வரும்படி அழைத்தான். மேருமலை காலம் தாழ்த்தியது. அதனால் கோபம் கொண்டான் உக்கிரபாண்டியன். அதன் செருக்கு நீங்குமாறு அம்மலையின் சிகரத்தில் செண்டினால் அடித்தான். அதனால் மேருமலை அசைந்து துடித்தது.

உடனே மேருமலை எட்டுத் தோள்களும், நான்கு தலைகளும், ஒரு வெண்குடையும் கொண்ட உருவத்துடன் பாண்டியன் முன்பு வந்து நின்றது. நீ காலம் தாழ்த்தியதற்கு என்ன காரணம் என்று கேட்டான் உக்கிரபாண்டியன். அதற்கு அந்த மேருமலை, "அடியேன் இவ்வுருவத்துடன் தினமும் சென்று அம்மையையும் சோமசுந்தரக் கடவுளையும் வழிபடுவது வழக்கம். இன்று ஒரு பெண்ணின் மோகச் சூழலில் ஆழ்ந்ததால் பெருமானின் திருவடிகளை வணங்குவதை மறந்தேன். அப்பாவத்தால் தங்களிடம் செண்டினால் அடியும் பட்டேன். தாங்கள் இங்கு வந்த காரணம் யாது?" என்று கேட்டது.

''நான் இங்குள்ள பொருளை விரும்பியே இங்கு வந்தேன்" என்றான் பாண்டியன். உடனே மேருமலை ''ஐயனே! நீர் விரும்பிய மாற்று உயர்ந்த செம்பொன் அதோ அந்த மாமரத்தின் அடியில் கீழ் உள்ள ஓர் அறையில் பாறையால் மூடிவைக்கப்பட்டுள்ளது" என்று கூறி, அப்பொன் இருக்கும் இடத்தையும் தன் கையால் சுட்டிக் காட்டியது.

உக்கிரபாண்டியன் செம்பொன் இருக்கும் அறையின் அருகே சென்றான். மூடியிருந்த பாறையை அகற்றினான். தனக்கு வேண்டிய பொன்னை மட்டும் எடுத்துக் கொண்டான். பின்பு அதை முன்பு போலவே பாறையால் மூடினான். அதன்மீது தனது இலச்சினையை இட்டான்.

பின் தேரில் ஏறிப் பல நாடுகளையும் கடந்து பாண்டிய நாட்டை அடைந்தான். அந்த வழியில் பல நாட்டு மக்களும் பாண்டியனை வரவேற்று, உபசரித்து மகிழ்ந்தனர். மதுரை மாநகரை நெருங்கினான். மதுரைத் திருக்கோயிலைக் கண்டான். தன் தேரில் இருந்து கீழே இறங்கினான். நிலத்தில் விழுந்து வணங்கினான்.

பின்னர் பாண்டிய மன்னனை மக்கள் அனைவரும் வரவேற்றனர். பின் மதுரை திருவீதிகள் வழியே சென்று மறைகள் முழங்கும் திருக்கோயிலை அடைந்தான். இறைவனையும் தேவியையும் வழிபட்டுத் தனது திருமாளிகையை அடைந்தான்.

(தொடரும்)

நன்றி : இராமலிங்கர் பணிமன்றம், சென்னை.

## எட்டுத் தீமைகள்

1. கடன்
2. யாசித்தல்
3. மூப்பு
4. விபசாரம்
5. திருட்டுத்தனம்
6. ஏழ்மை
7. நோய்
8. பிறர் உண்டு மீதமான உணவு

# மகனால் அறிவு பெற்ற யயாதிமன்னன்

உள்ளத்தால் நுகரப்படும் இன்பம் பேரின்பம்.

உடலால் நுகரப்படும் இன்பம் சிற்றின்பம்.

உடலால் நுகரப்படும் இன்பம் கொஞ்சநேரமே நுகர்பவரை மகிழ்வித்துப் பின் துன்பத்தில் ஆழ்த்தி விடும்.

ஆனால் உள்ளத்தால் நுகரப்படும் இன்பம் நினைத்தாலும் பேசினாலும் நிலைத்த இன்பத்தைத் தந்து கொண்டே இருக்கும்.

ஆகவே தான் மாணிக்க வாசகர்

**''தினைத்துணை உள்ளதோர் பூவினில் தேன் உண்ணாதே**
**நினைத்தொறும் பேசுந்தொறும் காண்தொறும் எப்போதும்**
**அனைத்தெலும்பு உள்நெக ஆனந்தத் தேன்சொரியும்**
**குனிப்புடையானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ!''**

என்று திருவாசகத்தில் பாடியிருக்கக் காணலாம்.

யயாதி எனும் பேரரசன் பாண்டவர்களின் முன்னோர்களில் ஒருவன். இவன் அசுரகுல குருவான சுக்கிராச்சாரியாரின் மகளான தேவயானியை மணந்து புலனின்பம் நுகர்ந்தும் புலனடக்கம் பெற்றான் இல்லை.

தேவயானியின் தோழியான சர்மஷ்டை என்பவளையும் மணந்து கொண்டான்.

இது அறிந்த சுக்கராச்சாரியார் கோபம் கொண்டு யயாதியைக் கிழவனாகும்படி சபித்தார்.

நடுஇளமைப்பருவத்தில் வயோதிகனாய் சபிக்கப்பட்டதைத் தாங்கிக் கொள்ள முடியாமல், சுகராச்சாரியாரின் கால்களில் விழுந்து தன்னை மன்னிக்குமாறும், சாபத்தைப் போக்கியருளுமாறும் மன்றாடினான் யயாதி.

''அரசனே! உன் மூப்பை மாற்ற முடியாது. உன் மூப்பை வேறொரு வாலிபனுக்குத் கொடுத்து அவன் இளமையை நீபெற்றுக் கொள்ளலாம்'' என்று ஆறுதல் கூறினார் சுக்ராச்சாரியார்.

யயாதிக்கு ஐந்து மகன்கள் இருந்தனர். அவர்களை அழைத்துத் தன் மூப்பை ஏற்றுக் கொண்டு, இளமையைத் தருபவர்க்கு இராஜ்ஜியத்தைத் தருவதாகவும் கூறி வேண்டினான் யயாதி.



முதலில் பிறந்த மகன்கள் நால்வரும் யயாதியின் கோரிக்கையை ஏற்க மறுத்து விட்டனர்.

ஆனால் இளைய மகனான புரூ என்பவன் தந்தைக்கு உதவமுன் வந்தான்.

''தந்தையே! உலக போகங்களை யாராலும் திருப்தியாக அனுபவிக்க முடியாது. உடலின்பம் நுகரநுகர ஆசை அதிகமாகி அல்லல்களே உண்டாகும். ஆன்மாவால் நுகரப்படும் இன்பமே மனநிறைவைத் தந்து நிலையான இன்பமாகத் திகழும்'' என்று அறிவுரை கூறினான் புரூ.

புரூவின் தத்துவங்களைக் கேட்கக் கூடிய நிலையில் யயாதி இல்லை.

சுக்ராச்சாரியார் உபதேசித்த மந்திரத்தைக் கூறிப் புரூவைக் கட்டி அணைத்து அவனுக்குத் தன் மூப்பினைத் தந்து மகனின் இளமையைப் பெற்றுக் கொண்டான் யயாதி,

தன் மனதிற்குப் பிடித்த சர்மிஷ்டையைத் தேடிச் சென்று பலகாலம் ஆனந்தத்தில் திளைத்த யயாதிக்கு உலக போகங்களால் மனநிறைவு உண்டாக வில்லை.

ஆசை என்பது நெய்யூட்டப் பெற்ற அனல் போல வளருமே தவிர குறையவே குறையாது என்பதை யயாதி அப்போது உணர்ந்து கொண்டான்.

திருப்தி ஏற்படாத உடலின்பம் எதற்கு? ஆன்மாவால் நுகரப்படும் நிலைத்த பேரின்பமே வேண்டும் என உணர்ந்தான் யயாதி.

மகன் புரூவை அழைத்தான். ''மகனே! நிலைத்த பேரின்பமே இனி எனக்கு வேண்டும். என் மூப்பைக் கொடு. நீ இளமையோடு இனிதிருந்து ஆட்சியைத் தொடர்ந்து நடத்து.'' என்று கூறி மகனிடம் மூப்பினைப் பெற்று தவம் புரிய காட்டிற்குச் சென்றான் யயாதி.

பேரின்பமே என்றென்றும் நிலைத்த இன்பம் என்பதை உணர்த்துகின்றது இவ்வரலாறு!. ★

க ஆனி ஸ்வாதியில் கருடனின் அம்சமாக ஸ்ரீ விஷ்ணுசித்தர் பிறந்தார். பெருமாளின் அனுக்ரஹத்தால் இவர் பொற்கிழியறுத்த பெரியாழ்வாராக மாறியவர், வட்பெருங்கோயிலுடையானுக்கு புஷ்ப கைங்கர்யம் செய்வதற்காக, ஒரு அழகிய நந்தவனத்தை அமைத்துப் பராமரித்து வந்தார்.

இவருடைய பராமரிப்பில் பூரித்த பூமிப் பிராட்டியார் இவருடைய 50 வது வயதில் நள வருடம் ஆடிப்பூரத்தில் இவருக்கு மகளாகத் தோன்றினார் துளசி வனத்தில். ஆக ஆழ்வார்களில் இருவர் தந்தையும் மகளுமாக அவதரித்ததலம் என்ற பெருமை உடையது ஸ்ரீ வில்லிப் புத்தூர்.

பட்டர் கண்டெடுத்த குழவிக்குக் கோதை என்று பெயர் சூட்டி, கண்ணுங்கருத்துமாக சீரிய முறையில் வளர்த்து வந்தார்.

தந்தை கட்டி வைத்த திரு மாலையை அவர் வெளியே போன சமயம் எடுத்து தன் கழுத்தில் சூடிப் பார்த்து அழகு பார்த்து வந்தாள் கோதை. இதை அறியாமல் ஆழ்வார் சாத்தும் மாலையை மிக்க உகப்புடன் பெருமாள் ஏற்று வந்ததை அவர் அறியவில்லை.

தற்செயலாக அக்காட்சியைக் கண்ட பட்டர் பிரான், மகளைக் கோபத்துடன் கடிந்து விட்டு, அன்று பெருமாளுக்கு மாலையைச் சாற்றாமல் மனம் வருந்தியபடி இருந்தார்.

பெருமாள் அன்றிரவு கனவில் தோன்றி



... வேண்டும் என்று நினைத்து அவளுக்கு ''ஆண்டாள்'' ''சூடிக் கொடுத்த நாச்சியார்'' ஆகிய இரு நாமங்களைச் சூட்டினார்.

அவளுக்கு திருமணம் செய்யும் விபரத்தைச் சொன்னபோது கோதை "மானிடவர்க் கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்'' என்று மறுத்தாள்.

வேறு என்ன உபாயம் என்று கேட்டார் பட்டர். உடனே, யாம் பெருமாளுக்கே உரியவள் என்றும், 108 தலங்களில் உள்ள பெருமாள்களின் வரலாற்றைத் தனக்குக் கூறுமாறும் தந்தையிடம் வேண்டினாள் கோதை. அவர் ஆரம்பித்தார்..

வட மதுரைக் கண்ணனின் வரலாறு அவளுக்கு மயிர்சிலிர்ப்பையும் திருவேங்கடமுடையானின் அழகு முகமலர்ச்சியையும், திருமாலிருந்த சோலை மணாளனின் வடிவழகு மனமகிழ்ச்சியையும் தந்தது. அரங்கனின் முறை வந்த போது அளவற்ற

# பங்குனி உத்திரத்தில் நடைபெற்ற ஆண்டாள் ரங்கமன்னார் திருமணம்

**திருமதி இந்திரா ஆராஅமுதன்**
திருவரங்கம்



மாலை அணிவிக்காமல் இருந்த காரணத்தை வினாவினார். அறிந்த பின் அவள் "சூடிக் கொடுத்தால்தான் மாலை மணக்கிறது" அதனால் அதையே, அவ்வாறே தனக்கு கொண்டு வந்து சூட்டுமாறு சொல்லி மறைந்தார்.

விழித்து எழுந்த ஆழ்வார் தனக்கு மகளாக வந்தவள் மலர் மங்கையின் அவதாரமாகத் தான்

இன்பம் அடைந்தாள். மணந்தால் அவனையே தான் மணப்பேன் என்று சூளுரைத்தாள்.

உடனே தன்னை ஆய்ப்பாடிப் பெண்ணாகவும், வடபெருங்கோயிலை நந்தகோபன் மனையாகவும் அப்பெருமானை கண்ணனாகவும் பாவித்து திருப்பாவை 30ம் பாடியபின், நாச்சியார் திருமொழியை அருளினார். வேங்கடத்தானுக்கு மேக விடுதூது விடுத்தாள். அடுத்து திருமாலிருஞ் சோலை அழகனுக்கு தான் அரங்கனை மணந்து கொள்ள உதவினால் நூறுதடா வெண்ணையும், நூறுதடா அக்காரவடிசலும் சமர்ப்பிப்பதாக இறைஞ்சினார். இவள் வேண்டுதலை நிறைவேற்றிவைத்தார் 'கோயில் அண்ணன்' என்று அழைக்கப்பெற்ற இவளுக்குப்

பின் பிறந்த ராமானுஜா.

''கர்ப்பூரம் நாறுமோ, கமலப்பூ நாறுமோ'' என்று அரங்கனைப் பற்றியே சிந்தையுடன் இருந்தவளின் அப்பாவுக்கும் இதே கவலை.

''கோயிலுக்கு மகளை அழைத்து வந்தால் யாம் ஏற்போம்'' என்று பட்டருக்கும், குடை கவரி வாத்தியங்கள், விருதுகள் ஆகியவைகளுடன் ஸ்ரீவில்லிப்புத்தூர் சென்று பட்டரையும் அவரது அருமைச் செல்வி கோதையையும் தம் பால் அழைத்து வரும்படி கோயலிபரர்களுக்கும், ''வில்லிப்புத்தூர் சென்று முத்துப் பல்லக்கில் பட்டர்மகளை ஏற்றி திருவரங்கரத்துக்கு அழைத்து வருவாயாக'' என்று வல்லபதேவன் கனவிலும் அரங்கன் பணித்தார்.

பாண்டிய மன்னன் உடனேயே ஸ்ரீவில்லிப் புத்தூர், திருவரங்கத்தை இணைக்கும் தெரு வழி தோரணங்கள், வாழை கமுகு, பந்தல் நட்டு சேனைகளுடன் புத்தூர் சென்று பட்டரிடம் விண்ணப்பித்தார்.

பலநதிகளிலிருந்து வந்த நீரைக் கொண்டு கோதையை நீராட்டி, புதுசு உடுத்தி அவள் "வாரணமாயிரம்" என்று கனவு கண்டவாறே அவளை மணிச் சிவிகையில் ஏற்றித் திருவரங்கம் நோக்கி வந்தார்கள். காவிரி நதி அப்போது பரந்து இருந்ததாம். மேலும் அடைய வளைந்தான் வெளி ஆண்டாள் சன்னிதியாக இப்போது இருக்கும் அந்த இடத்தில் அவள் சற்று தங்கினாளாம். அது இப்போது வெளி ஆண்டாள் சன்னிதியாக உருவாகியிருக்கிறது. பின் கோயிலை நோக்கி சென்றது சிபிகை.

சூடிக்கொடுத்த நாச்சியார் சிலம்பார்க்க, சீரார்வளையொலிப்ப, காதளவு நீண்ட கயல் கண்மிளிற, அன்ன மென்னடை நடந்து திருமாலின் திருவடியை வருடக் கருதி, நாகணையின் மீது ஏறி, அரங்கனுடன் ஐக்கியமான காட்சி வல்லபதேவன், பட்டர்பிரான், எல்லாருக்கும் வியப்பைத் தந்தது. அரங்கனும் அசரிரி வாக்காக ''சமுத்திர ராஜனைப் போல, நீரும் எனக்கு மாமனார் ஆனீர்" என்று உரைத்தார்.

பங்குனி உத்திர நன்னாளில் ஆண்டாளின் திருக்கல்யாணம் வெகு விமரிசையாக ஸ்ரீவில்லிப் புத்தூரில் இன்றைக்கும் கொண்டாடுவார்கள். கருட அம்சமான தமது தந்தைக்கு ஏற்றம் கொடுக்க அந்தத் தலத்தில் மட்டும் கருடன் ரங்கமன்னாருடன் ஆண்டாள் ஏக சிம்மாசனத்தில் காட்சி அருளுகிறார்.

ஸ்ரீரங்கத்தில் தெப்பஉத்சவத்தின் 6ஆம் திருநாளான யானைவாகனத்தன்று உள் ஆண்டாள் சன்னதியிலும், ஆதிப்பிரம்மோத்சவம் 6ஆம் திருநாளில் உறையூரிலிருந்து வரும்போது வெளி ஆண்டாள் சந்நிதியிலும் மாலைமாற்றிக் கொள்வது அரங்கனின் வழக்கம். கோதையின் சுயம்வரம் இவ்வாறு இனிதே முடிந்தது.

★

# அரங்க குறவஞ்சி

(திருவரங்கம் ரங்கமணி பாட்டி)



1. நல்ல குறி சொல்லுவேன் கேளாயம்மே! அரங்க
நாதன் அருள் கொண்டு சொல்வேனம்மே!
திருஅரங்கபுரி என்ற எங்கள் ஊரில்
இருபுறமும் காவிரியும் கொள்ளிடம் உண்டு.

2. முத்தெடுத்துப் போட்டு குறி பார்ப்பேனம்மே- பூங்
கோதே வந்து இந்த மனையில் குந்தம்மே
விட்டுச் சித்தர் கண்டெடுத்த பெண்மணியே
வீண் கவலை கொள்ளாமல் இடக்கையைக்
காட்டம்மே!

3. உலகு உய்ய நீ பாடிய பாடல் அமுதம் கேட்டு
உள்மீது அரங்கனும் மோகம் கொண்டார் அம்மே!
அரவணையில் தென்திசை நோக்கியே
அரங்கர்தான், உன்
பெற்றவரிடம் பேச வந்திடக் காண்பாய் அம்மே!.

4. குறிபலித்தால் பரிசு என்ன தருவாய் அம்மே1
தலைக்குப் போதுமான எண்ணையுடன்
பழைய சேலைகளில் ஒன்றும், என்
குழவிக்குப் பால் சோறும் தருவாய் நீ அம்மே!,

5. அந்திப் பொழுதும் ஆகுதம்மே! என்
சிங்கனும் எனைத்தேடி வந்திடுவானம்மே!
நீ கண்ட கனவும் நனவாகும் வேளையில்
மத்தளம் கொட்ட வரிசங்கு நின்றாத

6. பங்குனி உத்திர நன்னாளில் வந்து
அரங்கன் உன் கைத்தலம் பற்றுவான் அம்மே!
எங்கேயும் கொண்டாடும் வைபவம் தன்னில்
பொங்கும் மங்களங்கள் இனிதாக தங்கட்டும்
அம்மே!



# தமிழிசை வளர்த்த சீர்காழி மூவர்





பு.ஏ. இராமையா, இ.ஆ.ப.
தமிழ் வளர்ச்சி, பண்பாடு மற்றும்
இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை

## மாரிமுத்தாப் பிள்ளை

கருவிலே திருவுடைய மாரிமுத்தாப் பிள்ளை கி.பி.1712 ஆம் ஆண்டில் தில்லை விடங்கன் என்ற சிற்றூரில் பிறந்தார். கவி பாடும் ஆற்றல் அவருக்கு இளமையிலேயே அமைந்திருந்தது. அதனால் 18 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பெரும் புலவர்கள் வரிசையில் இடம் பெற்றார்.

இவர் சிதம்பரேசர் விறலிவிடுதூது, நொண்டி நாடகம், புலியூர் சிங்கார வேலர் பதிகம் போன்ற நூல்களை இயற்றியுள்ளார்.

தில்லைக் கூத்தனின் பெருமைகளையே மையப் பொருளாக வைத்து இசைப்பாடல்களான கீர்த்தனைகளையும், கிருதிகளையும் பாடியுள்ளார். கீர்த்தனைகளின் மையப் பொருளை வலியுறுத்துவதற்குப் பல சரணங்கள் அமைத்து கீர்த்தனைகளின் சிறப்பை எடுத்துக் காட்டி உள்ளார். வஞ்சப் புகழ்ச்சி அணி அமைந்த பல கீர்த்தனைகள் பாடியுள்ளார்.

''**வீடும் அம்பலமாகி**'' *(விலாசினி - சாய்ப்பு)*

''**என்ன பிழைப்பு உந்தன் பிழைப்பு**'' *(வேளாவளி, ஆதி'')*

என்று தொடங்கும் கீர்த்தனைகள் வஞ்சப் புகழ்ச்சி அணியில் அமைந்தவை.

**"ஒரு கால் சிவசிதம்பரம் என்று நீ சொன்னால் இருக்காது ஊழ்வினையே"**

எனத் தொடங்கும் ஆரபி ராகம் ஆதிதாளத்தில் அமைந்த கீர்த்தனையில் போலித்தனமான பொருளற்ற சடங்குகளைச் செய்து வருந்துகின்ற நிலையை எடுத்துக் காட்டி உண்மையை அறியாமல் வீணே இறந்து இறந்து பிறப்பது அறியாமை என்ற கருத்தையும் வலியுறுத்தி இக்கீர்த்தனையின் தரத்தை உயர்த்தி இருக்கிறார்.

மாரிமுத்தாப்பிள்ளை அவர்கள் கீர்த்தனைகள் மட்டுமல்லாமல் பல பதங்களையும் பாடி ஆடற்கலைக்குப் பெருமை சேர்த்துள்ளார்.

''**காலைத்தூக்கி நின்றாடும்**'' (எதுகுலகாம் போதி - ஆதி) எனத் தொடங்கும் பதமும் ''**ஏதுக்கித்தனை மோடிதான்**'' (சுருட்டி - ரூபகம்) எனத் தொடங்கும் பதமும் எல்லா சிறப்பு அம்சங்களும் பெற்றுத் திகழ்வன. இன்றளவும் ஆடற்கலை அரங்குகளில் பாடப்பட்டு வருகின்றன.

''**எந்நேரமும் ஒரு காலைத் தூக்கி இருக்கின்ற வகை ஏதையா**''

என்ற தோடி இராகம் ஆதிதாளம் இரட்டைகள்'' அமைப்பில் அமைந்த கிருதி எல்லா இசை அம்சங்களைக் கொண்டும், தொடை நயங்களையும் கொண்டும் விளங்குகின்றது.



இவர் பல கீர்த்தனைகள், கிருதிகள், பதங்கள் இயற்றியபோதும் தற்போது 25 இசை வடிவங்களே கிடைத்துள்ளன. இவர் பாடிய இசை வடிவங்கள் இருபத்தைந்தும் 17 இராகங்களில் அமைக்கப்பட்டுள்ளன.

அவற்றுள் ஆனந்த பைரவி, சௌராஷ்டிரம், மோகனம், ஆரபி, தோடி, எதுகுலகாம்போதி, சுருட்டி, ஆகிய இராகங்கள் குறிப்பிடத்தக்கதாகும். திரிபுடை, ரூபகம், சாய்ப்பு, ஏகம், ஆதி ஆகிய தாளங்களும் கையாளப் பட்டுள்ளன.

இவ்வாறு தில்லைக் கூத்த பெருமான் மீது இசை அம்சங்களும் இயல் சிறப்புக்களும் அமைந்த இசை வடிவங்களை இசை உலகுக்கு அளித்துப் பெருமை சேர்த்த பிள்ளை அவர்கள் கி.பி. 1787ஆம் ஆண்டு இறைவன் திருவடி நிழலில் தங்கும் பெருமை பெற்றார்.

பண்டைய தமிழ் இலக்கியங்கள் காட்டும் தமிழிசை மரபு மாறாமல் இன்றளவும் வளர்ந்து வந்திருக்கின்றது. இன்றும் பாடப்பட்டு வரும் இசை வடிவங்களில் தேவாரம், திருவாசகம், திவ்வியப்பிரபந்தம், திருப்புகழ் ஆகியவை மிகப் பழமையானவை. இந்த மரபினைப் பின்பற்றியே சீர்காழி மூவர்கள் அருள்மிகு முத்துத்தாண்டவர், அருள்மிகு அருணாசலக்கவிராயர், அருள்மிகு மாரிமுத்தாப்பிள்ளை ஆகிய மூவரும் தமிழிசை மரபை ஒட்டியே பல கீர்த்தனைகளையும் கிருதிகளையும், பதங்களையும் பாடி இசை உலகிற்கு தங்கள் நன்கொடையாக வழங்கி உள்ளனர் என்பது நாம் நன்றியுடன் நினைவில் கொள்ள வேண்டிய ஒன்றாகும். ★



## சோமாஸ்கந்த வடிவம்

காஞ்சியில் ஏகாம்பரேசுவரர் கோயிலுக்கும், காமாட்சியம்மன் கோவிலுக்கும் இடையில் குமரக் கோட்டம் அமைந்திருப்பது சோமாஸ்கந்த வடிவத்தை நினைவுறுத்தும்.

''ஏலநற் கடம்பர்தம் தந்தையிலங்கு மேற்றளி'' என்பது அப்பர் தேவாரம். காஞ்சியை வந்து கை தொழுவார்க்கு கந்தனைப் போல் எழில் மிக்க மக்கள் பேறு உண்டாகும் என்பது திண்ணம்.



## தமிழ்வளர்ச்சித் துறையின் சார்பில் ஔவையார் சிலைக்கு மாலை

௨௦௦௦ ஆண்டுகளுக்கு முன் தோன்றி வாழ்ந்த ஔவை மூதாட்டியார் அருந்தமிழ் நூல்கள் பல இயற்றி தமிழகத்திற்கு மாபெரும் தொண்டு புரிந்துள்ளார். ஒவ்வொரு ஆண்டும் மார்ச் 8ஆம் நாள் மகளிர் தினமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. ஔவையாரின் அருந்தொண்டினைப் போற்றும் வகையில் தமிழ்வளர்ச்சித் துறையின் சார்பில் கடற்கரையில் அமைந்து விளங்கும் ஔவையார் சிலைக்கு மாண்புமிகு அமைச்சர் பெருமக்கள், ஔவையார் தமிழ்ச்சங்கப் பிரமுகர்கள், கல்வியாளர்கள் மாலை அணிவித்துப் போற்றுகிறார்கள்.

# பதில்



★ திருமதி உஷாராணி, சென்னை-15

**கேள்வி :** கோயிலில் உள்ள பொய்கைகளில் ஏன் உப்பைக் கரைக்கிறார்கள்? அதன் உட்பொருள் என்ன?

**பதில் :** புண்ணிய தீர்த்தங்களில் உப்பை இடுவது, தம் பாவம் அதுபோல் கரைய வேண்டும் என்ற குறிப்பிற்காக.

★ இரா. சௌந்தரராஜன், சேலம்

**கேள்வி :** கோயிலின் கொடிமரத்தருகே மட்டும் விழுந்து வணங்குதல் சிறந்தது என்கிறார்களே! அது என்?

**பதில் :** கோயிலில் உள்பிரகாரத்தில் பலப்பல மூர்த்திகள் இருக்கின்றன. சில அதிதேவதைகள், சூட்சுமமாகவும் இருக்கின்றன. ஆகவே, உட்பிரகாரத்தில் கால் நீட்டி விழுந்து வணங்குதல் கூடாது. ஆகவே கொடிமரத்தருகில் மட்டும் விழுந்து வணங்குதல் வேண்டும்.

★ திருமதி தேவிகா, விழுப்புரம்

**கேள்வி :** ஆலயங்களுக்குச் செல்லும் போது நவகிரகங்களை முதலில் வழிபடுதல் சரியா?

**பதில் :** ஆலயங்களில் இறைவனுக்குத் தான் முதல் வணக்கம் செலுத்த வேண்டும். இறை வழிபாடு முடிந்த பின் நவகிரகங்களை வழிபடவேண்டும்.

இறைவனை வழிபடாமல் நவகிரகங்களை மட்டும் வழிபட்டால் அந்த நவகிரகங்களே அவர்களுக்கு நலம் புரியாது. தீமை புரியும்.

★ சுகுமார், மதுரை

**கேள்வி :** சண்டிகேஸ்வரர் சன்னதியில் கைதட்டி வணங்கலாமா? கூடாதா?

**பதில் :** சண்டிகேஸ்வரர் ஆலய வழிபாட்டின் பயனை நமக்கு வழங்கி அருள்பவர். அவர் இறைவனுடைய ஆலயத்தில் சதா சிவத் தியானத்தில் திளைத்திருப்பவர். ஆதலால் பயபக்தியுடன் அவரை வழிபட்டு மிகமிக மெல்ல ஓசையின்றிக் கை சேர்த்துத் தட்டி "அப்பனே! எனக்கு ஆலய வழிபாட்டின் பயனை அருள்க" என்று நாம் கும்பிட வேண்டும்.

★ கலையரசி, திருச்சி

**கேள்வி :** உபவாசம், விரதம் இவற்றால் உள்ளம் இறுகிப் போய்விடும் என்பது உண்மையா?

**பதில் :** உபவாசத்தாலும், விரதத்தாலும் மனம் இறுகிப் பிறருடைய துன்பம் கண்டு இரங்கும் தன்மை போய்விடும் என்பது பிழை.

உபவாசத்தால் உள்ளத்தூய்மை, ஒருமைப்பாடு, உடல்நலம் உண்டாகும். உபவாசத்தால் பட்டினியின் துயரம் நன்கு விளங்கும். இதுபோல் தானே உணவு கிடைக்கப் பெறாத ஏழைகள் பசியால் துயரம் அடைவார்கள் என்ற எண்ணம் நிச்சயமாக உண்டாகும். ஆகவே இரக்கம் உபவாசத்தால் விளையும்.

★ நாகலிங்கம், நாமக்கல்

**கேள்வி :** கள், கொலை, களவு, காமம், பொய் ஆகிய பஞ்சமா பாதகங்களையும் புரிந்த ஒருவன், ஆண்டவனிடம் தன்னை மன்னித்தருளும் படி உண்மையில் மனமுருகி வேண்டி நின்றால், ஆண்டவன் அவனை மன்னித்து அருள் புரிவாரா? மாட்டாரா?

**பதில் :** பஞ்சமா பாதகங்களைச் செய்தவர்களும் தாம் செய்த தவறை உணர்ந்து, வருந்தி, திருந்திக் கடவுளிடத்தில் மன்னிப்புக் கேட்டுக் கொண்டால் கடவுள் நிச்சயம் மன்னிப்பார். அப்பாவிக்கான தண்டனை முழுவதும் குறையாவிட்டாலும் ஓரளவு குறையும்.

"தீயவரேனும் குமரவேள் திருமுன் உற்றால்
தூயவராகி மேலைத் தொல்கதி அடைவர்"

என்று கந்தப் புராணம் கூறுகிறது.

# மகாபாரதம்

முனைவர் த. அமிர்தலிங்கம்

11

தேவர்கள்தந்த புடவையின் மகிமையறியாமல் பேராசை கொண்ட பெண்டிர் சிலர் ''தாய்'' எனக் கூறி வந்து புடவையை உடுத்தப்போய்க் கருகிப் போனதைக் கர்ணன் குந்திதேவியிடம் எடுத்துரைக்கின்றான்.

**''மாயனார் விரகிதுவென மனத்தினில் மதித்து**

**வந்தளித்திடும் வள்ளல்**

**நீயன்னாள் எனைப் பயந்தவள் என்னினும்**

**நின்மொழி நெஞ்சுறத் தேறேன்**

**பேயனார் சிலர் பேரறிவின்மையாற் பெற்ற**

**தாய் எனக்கென வந்து**

**தூயநாகரின் அமைந்ததொர் துகிலாற் துன்பம்**

**உற்று என்புரு வானார்''.**

(கிருட்டிணன் தூது 250)

**''அடாது செய்தவர் படாது பட்டனர்''** எனக் கர்ணன் குந்தியிடம் கூறிகின்றான்.

''மகனே! உனக்குநான்தான் உண்மையான தாய் என்பதில் உனக்கு எந்த ஐயமும் வேண்டாம். அந்த ஆடையைக் கொண்டு வா! நான் உடுத்திக் காட்டுகின்றேன்'' என்று கூறுகிறார் குந்தி.



கர்ணனும் தேவர்கள் தந்த புடவையைக் கொண்டு வந்து குந்தியிடம் கொடுக்கின்றான். அப்புடவையைத்தான் உடுத்தி கர்ணனின் தாய் தான்தான் என்பதை ஐயத்திற்கு இடமின்றி மெய்ப்பித்துக் காட்டுகின்றாள் குந்தி.

உண்மையில் குந்தியே தன் தாய் என்பதைக் கண்டுகொள்ளும் கர்ணனும், தாயன்பிற்காக ஏங்கித் தவித்த ஏக்கமெலாம் தீரப் பாசம் கொண்டு உருகுகின்றான்; குந்தியின் பாதங்கள் பணிந்து வணங்குகின்றான்.

ஈன்ற பொழுதிற் கண்டு, அன்றே மகனைப் பிரிந்தவளாகிய குந்தி, அவனைச் சான்றோன் என உலகமே போற்றத்தக்க உயர்ந்த நிலையிலேயே அவனைக் காணக் கொடுத்து வைத்தாள் எனினும் **''பரிந்துநான் அன்றே உனை வளர்த்தெடுக்கப் பாக்கியம் செய்யாமல் போனேனே''.** என்று கூறிக் கர்ணனை அணைத்துமிகப் பரவசப்படுகின்றாள்.

தாயும், சேயும் நீண்ட நெடுங்காலத்திற்குப் பிறகு ஒன்று சேர்ந்து பாசத்தால் உருகும் இவ்வொப்பற்ற காட்சியை வருணிப்பது கடினம் தான்.

**''இருந்த தாய் ஈன்ற அன்றுபோல் உருகி**

**இருதடங்கொங்கைப்பால் சொரிந்தாள்**

**அருந்துவான் போல இரவுசேய் விரும்பி**

**ஆதரத்துடன் புளகு ஆனான்''**

(கிருட்டிணன் தூது,252)

என்று குந்தியும், கர்ணனும் உற்ற புளகாங்கித நிலையை விவரித்திருக்கிறார் வில்லிப் புத்தூராழ்வார்.

தானே தாய் என்பதை மெய்ப்பித்துக் காட்டிய குந்தி, இனி தன் மகன் கர்ணனின் கடமை என்னவாய் இருத்தல் வேண்டும் என்பதை அவனுக்கு எடுத்துரைக்கின்றாள்.

தம்பிகள் ஆகிய பாண்டவர்கள் ஐந்துபேரும் கர்ணனின் மலர்ப் பாதங்களைத் தொழுது வணங்கி நிற்க, சிற்றரசர்கள் பலரும் வாயிற்புரத்தில் வந்து தரிசனத்திற்குக் காத்து நிற்க. வீரமும் செல்வமும் மேம்பட, குருகுலத்து அரசர்களுக் கெல்லாம் அரசனாய்க் கர்ணன் திகழ்ந்தோங்க வேண்டும்

என்ற தன் விருப்பத்தைத் தெரிவிக்கின்றாள் குந்தி.

''வருக என் மதலாய்! இளைஞர் ஐவரும்நின்
மலரடி அன்பினால் வணங்கி
உரிமையான் மனமொத்து ஏவலே புரிய
ஒரு தனி செய்ய கோல் ஓச்சி
அரசெலாம் வந்து உன் கடைத்தலை வணங்க
ஆண்மையும் செல்வமும் விளங்கக்
குருகுலாதிபர்க்குங் குரிசிலாய் வாழ்வு கூர்வதே
கடனெனக் குறித்தாள்.''

*(கிருட்டிணன் தூது 253)*

அன்புத்தாயின் இந்த வேண்டுகோளுக்கு இப்போது கர்ணன் அளிக்கும் பதில், அவனை உலகம் போற்றி வானுள்ள அளவும், கடல் உள்ள அளவும் ,காற்றுள்ள அளவும், சூரிய சந்திரர்கள் உள்ள அளவும் அவனுடைய உயர்ந்த குணத்தைப் போற்றிக் கொண்டாடத்தக்க பதிலாய் அமைந்து விளங்குகின்றது.

பதவிகள் கிடைக்குமென்றால் பாசத்தைப் பலர் உதறிவிடக் காணுகின்றோம். பழகிய நட்பினைப் பலர் மிதித்து விடவும் காணுகின்றோம். ஆனால் கர்ணன், தனை ஈன்ற தாயே அழைத்த போதும் நட்பிற்காக - செஞ்சோற்றுக் கடனுக்காகப் பாசத்தைப் பின்னுக்குத் தள்ளி அரசருக்கு அரசராகும் பெரும் பதவியையும் வேண்டாம் என மறுத்து விடுவதைக் காணுகின்றோம்.

தாயின் மனம் நோகாதவாறு தன் செயலில் உள்ள நியாயத்தையும் கர்ணன் எடுத்துக் காட்டுகின்றான்.

முருகப்பெருமான் தந்தைக்கு உபதேசித்த வள்ளல்; கர்ணமா மன்னனும் தாய்க்கு உபதேசித்த வள்ளல். கர்ணன் கூறும் மொழிகளைக் காண்க:

''பெற்ற நீர் மகஅன்பிலாமையோ அன்றிப்
பெரும்பழி நாணியோ விடுத்தீர்!
அற்றைநாள் தொடங்கி என்னை இன்றளவும்
ஆருயிர்த் துணைஎனக் கருதிக்
கொற்றமா மகுடம் புனைந்து அரசளித்துக்
கூடவுண்டு உரிய தம்பியரும்
சுற்றமானவரும் என்னடி வணங்கத் தோற்றமும்
ஏற்றமும் அளித்தான்''

*(கிருட்டிணன் தூது 254)*



மௌனகுரு தாயுமானவருக்கு உபதேசித்தல்

## எங்கும் இறைவியைக் கண்ட மகரிஷி தாயுமானவர்

திருச்சியை ஆண்டவர் விஜய ரகுநாத சொக்கலிங்க நாயகர். இவருடைய அரண்மனைக்கு வந்த வெளிநாட்டு யாத்திரிகர்கள் இவருக்கு விலை உயர்ந்த ஒரு பட்டாடையைப் பரிசாகக் கொடுத்தார்கள்.

அரசரோ தமது அபிமானத்திற்குரிய மகரிஷி தாயுமானவருக்கு அதனைப் பரிசாக அளித்தார்.

சில நாட்களில் அப்பட்டாடை வீதியிலே இரந்து திரியும் ஒரு பிச்சைக்காரியிடம் இருக்கக் கண்டார் மன்னர். தாயுமானவரை அழைத்து விசாரித்தார். "அன்னை அகிலாண்டேஸ்வரியே குளிரில் நடுங்கியவாறு என் எதிரில் வந்தாள். அன்னைக்கே யாம் பட்டாடை அளித்தோம்" என்று மகரிஷி விடைபகர வியப்புற்று நின்றார் மன்னர்.

''மடந்தைபொற்றிரு மேகலை மணியுகவே
மாசறத்திகழும் ஏகாந்த
இடந்தனிற் புரிந்தே நான் அயர்ந்திருப்ப
"எடுக்கவோ கோக்கவோ" என்றான்
திடம்படுத்திடவேலி இராசராசனுக்குச் செரு
முனைச்சென்றுசெஞ்சோற்றுக்
கடன்கழிப்பதுவே எனக்கினிப் புகழும்
கருமமும் தருமமும் என்றான்''

*(கிருட்டிணன் தூது 255)*

எனவரும் வில்லிபாரதப் பாடல்கள் கர்ணனின் மாட்சியை நமக்கு நன்கு உணர்த்துகின்றன.

திருவள்ளுவர் தம் திருக்குறளில் செய்ந்நன்றி அறிதலின் சிறப்பினைச் சிறப்புற விளக்கியுள்ளார்.

''எழுமை எழுபிறப்பும் உள்ளுவர் தங்கண்
விழுமந் துடைத்தவர் நட்பு'' (107)

''எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம்
உய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு'' *(110)*

எனவரும் குறள்கள் நன்றி கொன்றவர்களுக்கு நல்லவாழ்வு இல்லையாவதைக் கூறுகின்றன.

தாய் குந்தி ,மகன் கர்ணனிடம் கூறுகின்றார்.

''மகனே கர்ணா! என்னுடன் வந்து விடு! உனக்கு நல்ல வாழ்வு உண்டு.''

கர்ணன் வினவுகின்றான்: ''நன்றி கொன்றவர்களுக்கு நல்ல வாழ்வு எப்படியம்மா உண்டாக முடியும்?''

அதிலும் துரியோதனன் கர்ணனுக்கு எத்தகைய நன்மைகளை எல்லாம் செய்திருக்கின்றான்!

துரியோதனன் ஆதரித்திருக்காவிட்டால் கர்ணன் என்ற ஒருவன் வாழ்ந்தான் என்ற வரலாறே இருந்திருக்காதே!

ஊர் பேர் தெரியாத அனாதையான கர்ணனை அங்கதேசத்து மன்னனாகக் கொற்றமாமகுடம் புனையவைத்துத் தன் தம்பிகளும், உறவினர்களும், நண்பர்களும் தன்னைப் போல் மதித்துக் கர்ணனையும் போற்ற காரணமானவன் துரியோதனனே அல்லவா!

எவ்வளவு உயர்ந்த நட்பாக இருந்தாலும் பெண்களால் அந்த உயர்ந்த நட்பும் பாழாகி விடுவதை உலக வரலாறுகள் பல அறிவிக்கின்றன.

கர்ணன் துரியோதனைக் காண ஒரு முறை அவனுடைய அரண்மனைக்குச் சென்றிருந்தான். துரியோதனன் அந்நேரம் வெளியே சென்றிருந்த காரணத்தால் அவன் வரும் வரை அரண்மனையில் காத்திருக்க நேர்ந்தது.

துரியோதனனின் பட்டமகிஷி பானுமதி [illegible] கர்ணனும் இசைந்து விளையாடிக் கொண்டிருந்தான்.

வெளியே சென்றிருந்த துரியோதனன் சிறிது நேரத்தில் அரண்மனைக்குத் திரும்பினான். ஆட்ட விறுவிறுப்பில் துரியோதனன் வருவதைக் கவனிக்க வில்லை கர்ணன்.

கணவன் வருவதைக் கண்டு கணவனுக்கு மரியாதை கொடுத்துத் தன் இருக்கையை விட்டு எழுந்தாள் பானுமதி.

ஆட்ட நடுவில் பானுமதி எழுந்து நின்றதன் காரணத்தை அறிந்து கொள்ளாத கர்ணன். "ஏன் எழுகிறாய்?" என அவளைத் தடுக்க அவள் இடையினில் தரித்திருந்த மணிமேகலை அறுந்து மணிகள் சிதறி ஓடலாயின.

அப்போது தான் துரியோதனன் அங்கு வந்து நிற்பதைக் காணுகின்றான் கர்ணன். பானுமதியின் இடையாபரணமான மணிமேகலை அறுந்து மணிகள் சிந்தக் கூடிய அளவிற்குத் தான் எல்லை மீறி நடந்து கொண்டு விட்டதை உணரும் கர்ணன் துணுக்குறுகின்றான்.

ஆனால் துரியோதனனோ கர்ணனின் செய்கையை எல்லை மீறிய செயலாக எண்ணாமல் **''எடுக்கவோ, கோக்கவோ''** என்று கேட்டபடி சிந்திய மணிகளைப் பொறுக்கிச் சேர்க்கும் பணியில் ஈடுபடுகின்றான் என்றால் கர்ணனின் தோழமையை அவன் எவ்வளவு மதித்திருக்கின்றான்!

அத்தகைய ஆருயிர் நண்பனான துரியோதனனுக்கா துரோகம் செய்ய நினைப்பான் கர்ணன்; மாட்டான். ஆகவே தான் தன் தாயிடம் மேற்கூறிய சம்பவத்தை எடுத்துக் கூறிச் **''செஞ்சோற்றுக்கடன் கழிப்பதுவே எனக்கு இனிப் புகழும் கருமமும் தருமமும்''** என்று உறுதிபடக் கூறுகின்றான்.

தொடரும்...

## உணவும் குணமும்



*பாரதப் போருக்குப் பின் அஸ்தினாபுரத்தின் அரசரான தருமர், தம் தம்பியருடனும் துரோபதையுடனும் சென்று வீடுமரிடம் ஆசி புரியுமாறு கேட்டார். பல நீதிகளை எடுத்துரைத்தார் வீடுமர். அதைக் கேட்ட துரோபதை சிரித்தாள். "ஏனம்மா சிரிக்கிறாய்?" என்று கேட்டார் வீடுமர். "துரியோதனன் அவையில் துச்சாதனன் என்னை மானபங்கப் படுத்தியபோது அவர்களுக்கு நீங்கள் ஏன் நீதி போதிக்க வில்லை? அதை நினைத்தேன் சிரித்தேன்" என்றாள் துரோபதை. அதற்கு வீடுமர் "அப்போது துரியோதனன் இட்ட உணவு அருந்திய காரணத்தால் என் குணமும் மங்கி இருந்தது. போரில் துரியோதனன் உணவால் உண்டான குருதி யாவும் நீங்கிப் போயிற்று. என் குணமும் தூய்மையாயிற்று. ஆகவே இப்போது நீதி போத்னை செய்கிறேன்" என்று வீடுமர் பதிலுரைத்தார்.*

# பரமகுரு அருணகிரி பரவிய செங்கோட்டு முருகர்

தா. சந்திரசேகரன் இ.ஆ.ப.,
அரசுச் சிறப்புச் செயலாளர், தமிழ் வளர்ச்சி, பண்பாடு மற்றும் அறநிலையத் துறை

அருணகிரிநாதர் திருச்செங்கோட்டு வேலனிடம் தனியான அன்பு வைத்தவர் என்பதற்குப் பல சான்றுகள் காட்டலாம். எங்கே நினைத்தாலும் அங்கே வந்து அவர் முன் நின்று காட்சி தருபவன் செங்கோடைக் குமரன் என்று கந்தர் அலங்காரத்தில் ஒரு பாட்டில் பாடுகிறார்.

பலதலங்களுக்கும் சென்று பலவகையான கருத்துகளை அவர் பாடியிருக்கிறார். திருச்செங்கோட்டுக்கு வந்த போது அவருக்கு ஒரு நினைவு வந்தது. மனிதன் பிறந்தால் இறக்கத்தான் வேண்டும் என்பது நியதி. மூப்பினாலும் நோயினாலும் விபத்தினாலும் மாள்கிறான். உடம்பு அன்னையின் வயிற்றில் தோன்றியதாதலின் இது எப்போதாவது அழிந்துவிடும் என்பதில் சந்தேகம் இல்லை.



ஐந்து பூதங்களால் ஆனது இவ்வுடம்பு. பிரபஞ்சமும் ஐந்து பூதங்களின் கலப்பினால் உண்டானது. அண்டத்தில் உள்ளது பிண்டத்திலும் உண்டு. உடலிலிருந்து உயிர் போனபிறகு உடம்பை எரிக்கிறார்கள்; பலர் புதைக்கிறார்கள். எரித்தால் உடம்பாக நின்ற ஐம்பூதப் பொருட்கள் அந்த அந்தப் பொருள்களோடு போய்ச் சேர்ந்து கொள்கின்றன. புதைத்தாலும் அவ்வண்ணமே ஆகின்றன. இறந்த பிறகு ஊரார் அழுது புலம்பி எரிக்க உடம்பு உருவழிந்து மாறுவதே பெரும்பாலான வழக்கம்.

ஆனால் சித்தர்கள் இந்த உடம்பின் பஞ்ச பூதப் பகுதிகளை எரிக்காமலும் அந்தப் பூதத்தோடு பிரிந்து கலக்கும்படி செய்வார்கள். அப்போது உடம்பு மறைந்து விடும். உப்புப் பொம்மையைக் கடலிலே போட்டால் அது கடல் நீரோடு கரைந்து போகிறது. மீண்டும் தோன்றாமல் மறைந்து விடுகிறது. உடம்பில் உள்ள பகுதிகளில் மண் பகுதி மண்ணோடு கலந்து மறைய, நீர்ப்பகுதி நீரோடு ஒன்றி மறைய, நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகியவற்றின் பகுதி அந்தந்த மூலப் பூதங்களோடு கலந்து கரைந்து மறைந்துபோய் விடும். தாம் எப்போது மறைய வேண்டுமென்று விரும்புகிறார்களோ, அப்போது இந்த உடம்பை விடும் ஆற்றல் அவர்களுக்கு உண்டு.

அருணகிரிநாதருக்கு இந்த ஆசை உண்டாயிற்று. ''இந்த உடம்பை மற்றவர்கள் சாகும்பொழுது அல்லல்படுவது போலவிடக் கூடாது. இந்த உடம்பு வீழ்வதன் முன் முருகனிடம் அருள் பெற்று, இது மறைந்து பூதங்களோடு ஒன்றுபடுவதற்குரிய ஆற்றலைப் பெறவேண்டும்'' என்று விரும்பினார்.

அந்த விருப்பத்தை ஒருமுறை திருச்செங்கோட்டுக்கு வந்த போது விண்ணப்பித்துக் கொண்டார்.

''தெய்வீகம் பொருந்திய அழகிய மலையாகிய திருச்செங்கோட்டில் எழுந்தருளி இருக்கும் பெருமானே! வளமான சோதியே! கூர்மையான வேலாயுதத்தைத் திருக்கரத்தில் ஏந்திய தேவனே! எளியேன் இப்போது உன்னிடம் ஒரு விண்ணப்பத்தைச் சமர்ப்பிக்கிறேன். அதன்படி நீ அருள் செய்வாயா? அந்த விண்ணப்பம் இதுதான்..

என் உடல் என்று பலரும் சொல்லும் இந்தக் குடிசை எனக்குச் சொந்தமன்று. இது ஐம்பொறிகள் தங்கள் ஆட்சியை நடத்தும்

இடம். அவர்களுக்கு இடம் வைத்து, இரண்டுகாலும் நீட்டி வைத்து, இரண்டு கைகளைத் தொங்கவிட்டு, உயிரும் இதில் வாழட்டும் என்று நீ கருணை செய்து அளித்த வீடு இது. இந்த வீடு நிலையானதன்று; குலையும் தன்மையுடையது. என்று எங்கே எவ்வாறு குலைந்துபோகும் என்பதை யாரும் அறிய மாட்டார்கள். ஒன்றுமட்டும் உறுதி;

இது எப்படியும் அழிந்தே விடும். இந்த வீடு குலைவதற்கு முன்பே, இந்த வீட்டில் நான் வாழும்போதே, அந்தக் குலைவினால் வேதனையுறா வண்ணம் நீ எழுந்தருளி வந்து காப்பாற்ற வேண்டும். இந்த உடம்பில் இருக்கும்போதே அந்த அருளை வழங்க வேண்டும்'' என்று வேண்டிக் கொண்டார். அந்த வேண்டுகோள் கந்தர் அலங்காரத்தில் இருக்கிறது. அது வருமாறு :

''தெய்வத் திருமலைச் செங்கோட்டில்
வாழும் செழுஞ்சுடரே!
வைவைத்த வேற்படை வானவ
னே! மற வேன்உனை நான்
ஐவர்க் கிடம்பெறக் கால் இரண்
டோட்டி அதில் இரண்டு
கைவைத்த வீடு கலையுமுன்
னேவந்து காத்தருளே!''

இந்தத் திருப்பாட்டில் அருணகிரியார் முருகனிடம் விண்ணப்பம் செய்து கொள்வதோடு, ''அங்ஙனம் செய்தால் அடியேன் உன்னை மறக்க மாட்டேன்'' என்றும் சொல்கிறார். இந்த உடம்பினால் உண்டாகும் வேதனைகளை நன்கு அறிந்தவராதலினாலும், இதனைப் போற்றிப் பாதுகாத்தாலும் ஒருநாள் குலைந்துவிடும் என்ற உண்மையை உணந்ததவராதலினாலும், எடுத்த தேகம் விழுவதன்முன் இதனால் வரும் அல்லலைப் போக்கி இதை உதறிவிட வேண்டும் என்ற ஆர்வம் உந்த இந்த விண்ணப்பத்தைச் செய்து கொண்டார்.

தன் அடியார்களின் விருப்பத்தை நிறைவேற்றும் வள்ளலாகிய முருகன் அருணகிரியார் வேண்டியதை நிறைவேற்றினான். இந்தப் புலால் வீடு குலையுமுன்னே, இது ஏனையவருடைய உடம்புகள் அழிவது போல அழியா வகையை உபதேசித்தான்.

கந்தர் அநுபூதி பாடியபோது அருணகிரியார் இருந்த நிலை வேறு; அவர் தம் பூத உடம்பு மறையக் கிளி உருவத்தில் இருந்து அநுபூதியை அருளினார் என்பது செவி வழியாக வரும் வரலாறு. அதனை அவ்வாறே நம்புதற்கு வழி உண்டு. பௌதிக சரீரப் பகுதிகள் பூதங்களோடு மறைய ஞான உருவமாகிய கிளியின் வடிவு பெற்றார் என்பது ஒன்று. பசு கரணங்கள் மாறிப் பதிகரணம் பெற்று, எல்லாம் அவன் செயலாக நிகழும் ஜீவன் முக்த நிலையையே அவ்வாறு உருவகமாகச் சொன்னார்கள் என்று கொள்வது ஒன்று.

இந்த இரண்டு வகையிலும் பொதுவாக நம் உள்ளம்கொள்ள வேண்டியது ஒரு கருத்து. எல்லோரையும் போல இந்த உடம்பைப் போகவிடும் நிலையினின்றும் உயர்ந்து இன்பம் நுகரும் நிலையில் நின்று அநுபூதியைப் பாடினார் அருணகிரிநாதர் என்ற கருத்து இரு வேறு முறைக்கும் ஏற்றதே. இந்தப் பரு வீடு குலையுமுன் இறைவன் திருவருளால் உடல் இருந்தும் உடல் தொடர்பில்லாத பேரானந்தத்தை அவர் பெற்றார்.

ஆகவே அருணகிரிநாதர் போட்ட விண்ணப்பம் பலித்துவிட்டது. விண்ணப்பத்தில் சொன்னபடி வேண்டுகோளை நிறைவேற்றிய மூர்த்தியை இப்போது மறவாமல் நினைக்கின்றார். அதனையே இந்தப் பாட்டில் நாம் பார்க்கிறோம். ★

## வாசகர் எண்ணங்கள்



திருக்கோயில் இதழைப் படித்து வியப்புற்று மகிழ்ந்தேன். ஒவ்வொரு பக்கமும் அருமை. அறநிலையத்துறையின் அரும்பணி வளர்க! வெல்க!.

- நா. நல்லுசாமி, திருச்சி

"எழுத்துச் சித்தர்" பாலகுமாரன் அவர்களின் "அன்னதானம்" கட்டுரை, வயதானவர்களுக்கு அன்னதானத் திட்டம் வரப்பிரசாதமான திட்டம் என்பதை எடுத்துக் காட்டியது.

- பிரேமா விநாயகம், சென்னை-15

முன்னொரு காலத்தில் சுனாமி வெள்ளம் பொங்கியபோது உக்கிரகுமார பாண்டியன் சிவபெருமான் தந்த வேலினால் அதை வற்றச் செய்ததை "திருவிளையாடல் புராணம்" எடுத்து விளக்கியது. இறைவழிபாடே இயற்கைச் சீற்றத்தை தணிக்கும் என்பதை இதனால் அறிந்து கொண்டோம்.

- பிகே. சந்திரசேகரன், சென்னை

தி ருவருள் துணையுடன், "திருமந்திர உபதேசம்" என்ற தலைப்பில் கட்டுரைகள் திருக்கோயில் இதழில் வெளி வந்து கொண்டிருக்கின்றன. இதற்காக திருவருளுக்கு எஞ்ஞான்றும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டவன்.

இது ஒருபக்கம், திருமந்திரத்தில் உபதேசம் என்ற பகுதி முதல் தந்திரத்தில் முப்பது மந்திரங்களாக வைக்கப்பட்டுள்ளதே! நீங்கள் அதைத் தொடாமல் வேறு பலவற்றை எடுத்து எழுதி வருகிறீர்களே என்று கூறி விளக்கம் கேட்கிறார் ஒரு அன்பர்.

இந்த உலகில் பிறக்கும் ஒவ்வொரு ஆன்மாவும் வீடு பேறு பெற முயற்சி செய்வதில்லை. வாழ்க்கையில் அடைய வேண்டிய குறிக்கோள்களைப் பற்றியும், மேற்கொள்ள வேண்டிய நெறிகளைப் பற்றியும் கவலைப்படாமல், பொருள் சேர்த்து, வசதிகளைப் பெருக்கி, அவற்றிலிருந்து இன்பம் பெறுவதே போதுமானது என்ற கருத்துடன் எண்ணற்ற மக்கள் இறப்பு - பிறப்பு என்ற சூழலில் நன்றாகச் சிக்கிக் கொள்கிறார்கள்.

ஆனால் ஒருசிலர், வாழ்க்கைக் கடலை நீந்திக் கரையேற விரும்புகிறார்கள். இறைவனுடைய திருவடிக்கீழ் தங்களை கிடத்திக் கொள்ளும் தீவிர வேட்கையுடன், அதற்கான வழிவகைகளை எடுத்துச் சொல்லக்கூடிய ஞானாசிரியர்களை நாடுகிறார்கள். அவர்களுடைய ஆன்மாக்கள் பக்குவம் அடைந்தவை; ஞானோபதேசத்திற்குத் தயாராக இருக்கின்றன.

அவர்கள் பெற்ற தகுதியை எல்லோரும் பெற வேண்டும். இந்தத்தகுதியைத்தான் ஞானா சிரியன் முதற்கண் சோதிக்கின்றார். உயிர் இந்தத் தகுதியை, வாழ்க்கை ஒழுக்கங்களாகிய தவம், அறம் போன்றவற்றால் பெறுவதே தலையாயக் கடமையாக இருப்பதால் திருமூலர் பெருமான், திருமந்திரத்தில் பல இடங்களில் இவற்றைப் பற்றிப் பேசுகிறார். திருமந்திரத்தின் முதல் தந்திரத்தில் உபதேசப்பகுதி, ஞானம் பெற விரும்புபவன் இவ்வுலகத்தில் எப்படி வாழ வேண்டுமென்று திருமந்திரத்தின் துணையுடன் தெரிந்து கொள்ளுவது மிக நல்லது.

ஞானம் என்பது வேறு, இறைவன் வேறு என்று கருதித் தத்துவங்களில் மட்டும் நிற்பது நிறைவாகாது. ஞானம் இறைவனுக்கு உட்பட்டது. அப்பால் பட்டது அன்று. அதற்காக அறம், தவம், போன்றநெறிகளை மேற்கொள்ளும் போது, அங்கே அன்பு இல்லை என்றால், இறையனுபவத்தைப் பெற இயலாது என்று தெளிவாகச் சொல்கிறார் திருமூலர் பெருமான். அத்துடன், இறைஞானம் பெறுவதற்கு, தவம், அறம் படிகளாக அமைந்தாலும், அவற்றைச் செயல்படுத்தும் போது அன்பு என்பது இல்லையானால் கொள்கை நிறைவேறாது என்றும் எடுத்துரைப்பார்.




வெறும் சடங்குகளுடன் நின்று விடுவது பயன்தராது. இறைவனுடைய புகழை உணர்வின்றி ஓதுதல் ஞானத்தை தராது. ''காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி'' ஓத வேண்டும் என்றார் திருஞான சம்பந்தர். யோகம் என்ற பெயரில் உடலைப் பலவகைகளிலும் படுத்திக் கொள்வர் சிலர். அத்தகைய சாதனைகளாலும் ஞான அனுபவம் கிட்டாது என்கிறார் திருமூலர். எந்த விதமான முயற்சிக்கும் அன்பு அடிப்படையாக இருக்க வேண்டும்.

# திருமந்திர உபதேசம்


திருமந்திரச் செல்வர்
**டி.வி. வெங்கட்ராமன்**, இ.ஆ.ப., (ஓய்வு)


அன்பினால் அகம்குழைய வேண்டும். என்பும் உருக வேண்டும். இறைவனைச் சிந்தனையில் என்றும் நிறுத்த வேண்டும். நினைக்கும் போதும், பேசும் போதும் இறை சிந்தனையே மையத்தில் இருக்க வேண்டும். எலும்பை விறகாக்கி உடல் சதையைஅறுத்துத் தீயில் சுடும் அளவுக்கு யோகம்,

தவம் போன்றவைகளை நடைமுறைப் படுத்தினாலும், சிவானுபவம் கிட்டாது. அன்பிருந்தால் எல்லாம் கிட்டும்.

''என்பே விறகா இறைச்சி அறுத்திட்டுப்
பொன் போல் கனலில் பொறிய வறுப்பினும்
அன்போடுருகி, அகங்குழைவார்க்கன்றி
என் பொன் மணியை எய்த வொண்ணாதே''

(திருமந்திரம் - 272)

அன்பு என்பது யாது? அன்பைப் பற்றி வீபரிதமான கருத்துக்களைப் பறைசாற்றி வரும் சமுதாயத்தில் நாம் எல்லோரும் வாழ்ந்து வருகின்றோம். திரைப்படங்கள் தொலைக்காட்சியில் வரும் நிகழ்ச்சிகள், பத்திரிக்கைகள் போன்றவற்றின் மூலமாக அன்பினைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டிய நிலையில் நம் மக்கள் உள்ளார்கள் என்பது வருந்தத்தக்கது. இதெல்லாம் அன்பாகாது.

புணர்ச்சியில் கணவனும், மனைவியும் ஒருவரோடு ஒருவர் அன்பு செலுத்தினாலும் அது அன்பாகாது. அங்கே ஏற்படும் ஒடுக்கம் உணர்ச்சியால் நிகழ்கிறது. உணர்ச்சி பாசத்தின் வெளிப்பாடு. பாசம் தன் முனைப்பை, அகங்காரத்தை மையமாக வைத்து, உயிரை ஆட்டிப் படைக்கின்றது. அத்தகைய உணர்ச்சிக்கு அன்பு என்பது தவறான பெயர். இறைவன் இந்த உணர்ச்சியை உயிருக்குக் கொடுத்து அத்துடன் உயிரை ஒரு விதமான மயக்கத்தில் ஆழ்த்துகிறார். அந்த மயக்கத்தில் உயிரானது, தான் பெறும் உணர்ச்சி அனுபவம் இன்பத்தைத் தருவதைக் கண்டு அதுவே நிலையானது என்று கருதி வரப்போகும் துன்பத்தைப் பற்றிச் சிறிதும் சிந்திப்பதில்லை.

அதே நேரத்தில் இறைவன் அந்த துன்பம் நீங்கி, நிலையான இன்பத்தைப் பெறுவதற்காக அன்பு எனும் உணர்ச்சியையும் படைத்து உயிருக்குள் நிரப்பிவைத்தான். அந்த அன்பு எனும் பண்பினை முன்னதாக வைத்து, அதனால் படும் இன்பத்தைப் பின்னதாகவும் வைத்து இறைவன் அருள் பாலிக்கின்றான். இறைவனுடைய அற்புதமான செயலையும் திருவருளையும், இறைவனையும் தெரிந்து கொள்ள நாம் முயல்வதில்லையே என்கிறார் திருமூலர்.

**''முன் படைத்தின்பம் படைத்த முதலிடை
அன்படைத் தெம் பெருமானை அறிகிலார்
வன்படைத் தந்த அகலிடம் வாழ்வினில்
அன்பமைத் தான் தன் அகலிடத்தானே''**

(திருமந்திரம் - 276)

மனம், புத்தி, சித்தம் அனைத்தும் இறைவனிடம் அழுந்தி நிற்க வேண்டும். சிந்தனை முழுவதும் இறைவனேயாக, நான் என்ற நினைப்பு அறவே ஒழிந்து விடும். அங்கே வெளிப்படும் அன்பாகிய உணர்வு உயிரின் அடிமைதனத்தை உயிருக்கு எடுத்துக் காட்டி மேலும் இறைவனுடன் ஒன்றுவதற்கான ஆர்வத்தை வளர்க்கும். உலகப் பற்று நீங்கி விட்ட நிலையில், இறை அன்பினால் இன்பம் தோன்றி வரும்.



சான்றோர்கள் இந்த இன்பத்திற்காக மட்டும் இறைவனிடம் அன்பு செலுத்துவதில்லை. அன்பு செய்வதையே முடிவான பணியாகக் கொள்கிறார்கள். அன்பினால் அழுவார்கள்; அரற்றுவார்கள்; எலும்பும் உருகும் அளவுக்கு இரவும் பகலும் இறைவனைப் போற்றுவார்கள். அன்பு மேலீட்டால், இறை உணர்வினை அனுபவித்துச் சுவைத்து இன்பம் பெறுவார்கள்.

''அன்புள் உருகி அழுவன் அரற்றுவன்
என்பும் உருக இராப்பகல் ஏத்துவன்
என் பொன் மணியை இறைவனை ஈசனைத்
தின்பன், கடிப்பன் திருத்துவன் தானே''

(திருமந்திரம் - 2980)

சிவனடியார்கள் சிவன்பால் அன்பு செலுத்துவதையே தலையாய இன்பம் என்று அறிந்து கொண்டவர்கள். அதிலே ஏதாவது ஒரு தடை எழுந்தால், அந்தத் தடையை நீக்கத் தங்களுடைய



## சங்கு சக்கர ஆஞ்சநேயர்

திருமாலுக்கு உரிய சங்கு சக்கரங்களை ஆஞ்சநேயர், தம் திருக்கரங்களில் வைத்துக் கொண்டு யோக ஆஞ்சநேயராக சோளிங்கரில் அருள்பாலிக்கிறார்.

உயிரையும் தியாகம் செய்யத் தயங்க மாட்டார்கள். சிவபெருமான் இடத்தில் மட்டுமல்ல சிவனடியார்கள் மீதும் சிறப்பான அன்பு வைத்து, அவர்களை வணங்குவர். அவர்களுடைய துயரைத் தீர்க்க செயற்கரியவற்றையெல்லாம், திருவருள் துணையுடன் செய்து முடிப்பர். அவர்களுடைய அன்பு மலை போன்றது. இறைவன் எல்லாவற்றிற்கும் அப்பாலாய் இருப்பவன், அன்பிற்குக் கட்டுப்படுகிறான்.

"**அன்பெனும் பிடிக்குள் அகப்படும் மலையே**" என்றார் வள்ளல் பெருமான்.

''**பத்தி வலையில் படுவோன் காண்க**'' என்றார் மணிவாசகப் பெருமான். அவர் பக்திக்கு இலக்கணமாக விளங்கினார். இருந்தாலும் அவர் முழுமையான நிறைவு பெற வில்லை. அன்பெனும் தீயில் இட்டுத் தன்னை மாய்த்துக் கொண்டார். ஆனாலும் தன் அன்பு போதவில்லையே என்று அழுதார். தனது அன்பைப் பொய் என்று கருதினார். மேலும் மேலும் அன்பு செலுத்தும் தன்மையும் நெஞ்சமும் தனக்கில்லையே என்று வருந்தினார். அவர் அருளிய திருவாசகம் உலக இலக்கியத்தில் எம்மொழியிலும் காணப்படாத அளவுக்கு அன்புக் காப்பியமாக உயர்ந்து நிற்கின்றது.

அருளாளர்கள் பொதுவாக, தங்களைப் பிறருடன் அல்லது மற்ற சிவனடியார்களுடன் ஒப்பிட்டுப்பார்ப்பதில்லை. ஆனால் மணிவாசகப்பெருமான் கண்ணப்ப நாயனாரை நினைத்துப் பார்க்கிறார். கண்ணப்பர் இறைவன் பால் செலுத்திய அன்புக்கு ஈடாகத் தான் இறைவனுக்கு அன்பு செய்ய வில்லை என்று கருதுகிறார். இருந்தாலும் தனக்கு அருளித் தன்னை ஆட்கொண்டு பணிவித்துத் தன்னை வாவென்று அழைத்துப் பெருங்கணை காட்டிய இறைவனுக்கு நன்றி செலுத்துகின்றார். இந்த உணர்வை மாணிக்கவாசகப் பெருமானிடம் பார்ப்பதில் வியப்பொன்றும் இல்லை.

"**கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்**
**என்னப்பன் என்னொப்பில் என்னையு**
**மாட்கொண்டருளி**
**வண்ணப் பணித்தென்னை வா என்ற வான் கருணைச்**
**சுண்ணப் பொன் நீற்றற்கே சென்றுதாய் கோத்தும்பி**''.
(திருவாசகம், திருக்கோத்தும்பி)

கண்ணப்பருடைய முற்பெயர் திண்ணன். வேடர் குலத்தை சேர்ந்தவர். கல்வி, கேள்வியில் பயின்றவர் இல்லை. தத்துவங்களைத் தெளிந்து கொண்டிருக்கவில்லை. இறை ஞானத்தைப் பற்றிச் சிந்தித்திருக்கவும் இல்லை. அவர் சிறந்த வேட்டைக்காரராக வளர்ந்தார். அச்சமின்றி வேட்டையாடினார். வேட்டையாடுவது தவறு என்றும் கருதவும் இல்லை.

இருந்தாலும் சிவபெருமான் திண்ணனைத் தமது திருவடிகளுடன் இணைத்துக் கொள்ள விரும்புகிறார். திண்ணனார் முன்னம் பிறவிகளில் செய்த தவம் அவன் எடுத்த இப்பிறவியில் முழுமை பெறுகிறது. திண்ணனார் இறைவனாரைச் சேரும் நேரம் நெருங்குகிறது.

இறைவன் திருக்காளத்தி மலையில் குடுமித் தேவனாகத் தன்னை, ஒரு வழிபாட்டுக்குரிய தெய்வமாக அமைத்துக் கொள்கிறார். சுனை நீரைத்தேடி மலையேறும் திண்ணனாரின் உயிர் பாசம் நீங்குகிறது. சார்வுகள் விட்டு அகலுகின்றன. அவர் உள்ளத்தில் ஏதோ ஓரிடத்தில் குவிந்திருந்த அன்பு உணர்வு விரிகின்றது. திண்ணனார் கல்விமானாக இருந்திருந்தால், அந்த அன்பு உணர்வுக்கான அறிவு சால் விளக்கங்களைத் தேடிக் கண்டுபிடித்திருப்பார். அவர் உள்ளத்தில் பொங்கி எழும் அன்பு அதற்கு இடம் கொடுக்க வில்லை. அது அவரது உள்ளத்திலிருந்து வெளி வந்து அவர்தம் உருவத்தை நிரப்புகிறது.

''**பொங்கிய ஒளியின் நீழல் பொருவில் அன்புருவமானார்**'' இது சேக்கிழார் பெருமானின் திருவாக்கு.

கண்ணப்பநாயனாருடைய வரலாறு நமக்குத் தெரிந்ததே. இங்கு நீட்ட வேண்டியதில்லை.

கண்ணப்பர் ஒரு சில நாட்களிலே சிவன் பால் வளர்த்த அன்பு ஈடு இணையற்றது என்பதை சிவபெருமானே சிவகோசரியாருக்கு விளக்குவது, அன்பே சிவமாய் அமர்ந்திருப்பதாகிய திருமூலர்பெருமான் கோட்பாட்டை உறுதிப் படுத்துகிறது.

"**அவனுடைய வடிவெல்லாம் நம்பக்கல் அன்பென்றும்**
**அவனுடைய அறிவெல்லாம் நமை அறியும்**
**அறிவென்றும்**
**அவனுடைய செயலெல்லாம் நமக்கினியவாம் என்றும்**
**அவனுடய நிலை இவ்வாறு அறிநீ என்று அருள்**
**செய்தார்**" என்பது சேக்கிழார் அருள்வாக்கு.

(தொடரும்...)

ஏ. கிருஷ்ணன், சென்னை-5

# சிங்கப் பெருமாள் கோயில் உக்கிரஹ நரஸிம்மர்

பாற்கடலில் ஆதிசேஷன் மீது பள்ளி கொண்டிருக்கும் எம்பிரான் ஸ்ரீமன் நாராயணன் எடுத்த அவதாரங்களில் ஸ்ரீநரஸிம்ம அவதாரம் புகழும் பெருமையும் வாய்ந்தது என்பது வரலாறு.



இரணியன் என்ற வல்லமை படைத்த அசுரன் தன் கடும் தவத்தால் பல வரங்களை மனிதர்களினாலோ, விலங்குகளாலோ, உள்ளேயும் வெளியேயும் எந்த ஆயுதங்களாலும் மரணம் ஏற்படக் கூடாது என்று இறைவனிடம் பெற்ற வரம் முக்கியமானதாகும். பிறகு இரணியன் யாரும் நாராயணன் நாமத்தை சொல்லக் கூடாது என்று கூறி அளவு கடந்த பெருந்துன்பங்களை மக்களுக்குச் செய்ததோடு, எல்லோரும் தன் பெயரை மட்டுமே தெய்வமாகக் கருதி சொல்ல வேண்டுமென்று கடுமையான கட்டளையிட்டான். இரணியன் ஆட்சியில் தர்மம் அழிந்து அதர்மம் ஓங்கியது. மக்கள் மிகவும் வேதனைப்பட்டார்கள். பயந்து நடுங்கினார்கள். அராஜகம் தலைவிரித்து ஆடியது.

இரணியனின் மகன் பிரஹலாதன் மிகுந்த தெய்வ நம்பிக்கையும், பக்தியும் உள்ளவன். அவன் இறைவன் ஸ்ரீமந்நாராயணன் தான் பரம்பொருள் என்றும் நான் அவர் பெயரைத்தான் சொல்லுவேன் என்றும் பிடிவாதமாகக் கூறினான். பல தடவை தன் பெயரைத் தான் சொல்ல வேண்டுமென்று கூறியும் கேட்காத பிரஹலாதன் மீது கடும் கோபமடைந்த இரணியன் தன் மகனைக் கொல்வதற்கு நஞ்சை ஊட்டியும், யானையின் கால்களால் இடரச் செய்தும், கடலில் ஆழ்த்தியும், மலையிலிருந்து உருட்டியும் கொல்ல முயன்றான். இத்தனை ஆபத்திலிருந்தும் தன் மகனை அந்த ஸ்ரீமந் நாராயணன் தான் காப்பாற்றி வருகிறான் என்பதை இரணியன் அறிந்தான்.

அந்த நாராயணன் எனக்கு பயந்து நடுங்கி, ஒளிந்து கொண்டிருக்கிறான் என்றும், என் நேரில் வர என்ன தயக்கம்? நீ அவனை எங்கிருக்கிறான் என்பதைக் காட்டினால் இந்த நிமிஷமே அவனைக் கொன்று ஒழிப்பேன் என்று இரணியன் கூற உடனே பிரஹலாதன் "அவன் தூணிலும், சிறு துரும்பிலும் இருக்கின்றான் இறைவன் இல்லாத இடமே இல்லை" என்று பதில் சொன்னான். உடனே இரணியன் மிகுந்த கோபத்தோடு அரண்மனையில் உள்ள ஒரு துணைக் காட்டி, "இந்தத் தூணில் இருக்கிறானா உன் நாராயணன்?" என்று கோபத்தோடு கேட்டான். உடனே பிரஹலாதன் "நிச்சயம் இருக்கிறான்" என்று பக்தியுடன் கூற, தனது கையில் இருந்த வலிமை மிக்க கதாயுதத்தால் தூணை ஓங்கிப் பலமாக அடித்தான். அந்த தூண் பயங்கர சப்தத்துடன் இரண்டாகப் பிளந்து கொண்டது. ஸ்ரீமந் நாராயணன் நரஸிம்ஹ வடிவில் (தலை சிங்கமாகவும், உடல் மனித வடிவமாகவும்) பேரிரைச்சலோடும் பயங்கரமான கோபத்தோடும் வெளியே பாய்ந்தார். உடனே இரணியன் பெரும் சினம் கொண்டு தன்முன் தோன்றிய ஸ்ரீநரஸிம்ம மூர்த்தியை எதிர்க்க, அவனை நரஸிம்மர் இரு கைகளாலும் அறைந்து வாசற்படியில் தனது மடியில் அவனை கிடத்திக் கொண்டு, கைகளிலுள்ள கூரிய நகங்களால் வயிறைக்

# அறுபத்துமூவர் அருள்வரலாறு

- ஈரோடு
தங்க விசுவநாதன்

தமிழ்நாட்டில் சிறப்புப் பெற்ற அரிய பகுதி நடுநாடு என்பதாகும். இத்திருநாடு அளப்பரும் தவம் செய்ததாகும். ஏன் என்றால் அப்பரும் சுந்தரரும் பிறக்கும் தவத்தை செய்தது அந்தநாடு. நடுநாட்டின் சிறப்பினைக் கூற வந்த வில்லிப்புதூராரின் திருமகனான வரந்தருவார் என்ற பெருமகன் கூறுவதைக் கேளுங்கள்.



கார்காலம் - மழை கொட்டுகிறது. கார் இருள், இந்தச் சூழலில் ஒரு பெரியவர் ஒரு வீட்டின் முன் அறையில் படுத்திருந்தார். அதுவோ மிகச் சிறிய அறை. அவருக்கே அவ்விடம் போதுமானதாக இல்லை என்றாலும் வேறு வழியின்றிப் படுத்திருந்தார். அப்போது ஒரு குரல் "அய்யா! நானும் உள்ளே வரலாமா?" என்று வந்தது. அதற்குப் பெரியவர் "வாருங்கள் ஒருவர் படுக்கலாம், இருவர் இருக்கலாம் வாருங்கள்" என்றார். இருவரும் அமர்ந்து இருந்தனர். மூன்றாவது ஒருவர் வந்து "உள்ளே வரலாமா" என்றார். அதற்கு அவ்விருவரும் "ஒருவர் படுக்கலாம்", "இருவர் இருக்கலாம்", "மூவர் நிற்கலாம் வாருங்கள்" என்றனராம். எவ்வளவு அன்புடமை, பொறையுடைமை பாருங்கள்!.

இம்மூவருக்கும் மேலாக நான்காவதாக ஒருவர் தோன்றி மூவரையும் நெருக்கினாராம். உடனே மூவரில் ஒருவர் விளக்கேற்றிப் பார்த்தாராம். அப்போது நாராயணன் சங்குச் சக்கரத்தோடு தோன்றினாராம். இவர்கள் வழிபட்ட நாடு இந்த நடுநாடு. அது மட்டுமல்ல தேவர்களும், வேதங்களும் தேடித் தேடிக் காணாது மலைத்து நிற்கின்ற சிவபெருமானைப் பாடி எல்லோராலும் மதிக்கப் பெற்ற சம்பந்தர், அப்பர், சுந்தரர் என்ற மூவரில் இருவர் பிறந்த நாடு என்று பாராட்டுகிறார். வரந்தருவாரின் வளமையான பாடல் இதோ,

**பாவரும் தமிழால் பேர்பெறுபனுவல்**
**பாதி நாளிரவில் மொழி விளக்கேற்றி**
**முகுந்தனைத் தொழதந்தநாடு**
**தேவரும் மறையும் இன்னமும் காணாச்**
**செஞ்சடைக் கடவுளைப் பாடி யாவரும்**
**மதித்தோர்**
**மூவரில் இருவர் பிறந்த நாடு இந்த நாடு".**

இதே நடுநாட்டைப் பாட வந்த நம் தெய்வச் சேக்கிழார்.

**அறந்தருநாவுக்கரசும் ஆலால சுந்தரரும் பிறந்தருள உளதானால் நம்மளவோ? பேருலகில் சிறந்த திருமுனைப்பாடித் திறம்பாடும் சீர்ப்பாடு என்பார்.**

அப்படிப்பட்ட நடுநாட்டிலே திருநாவலூர் என்ற ஓர் அழகிய திருநகர். அவ்வூரில் வாழ்ந்த ஆதிசைவக் குடும்பத்தில் சடையனார் என்ற பெருமகன் வாழ்ந்தார். அவரது துணைவியின் பெயர் இசை ஞானியார். இவ்விருவரும் மகப்பேறு வேண்டித் தவம் கிடந்தனர். ஆலால சுந்தரரின் மண்ணுலக வரவிற்கும் இவர்கள் தவத்திற்கும் பாலம் அமைத்தான் பரமன். அதன் விளைவு இசை ஞானியார்பால். தீது அகன்று உலகம் உய்யத் திரு அவதாரம் செய்தார் ஆலால சுந்தரர். சேடியர்களில் கமலினி என்பவர் திருவாரூரில் பதியிலார் குலத்தில் தோன்றினார். அனிந்திதை என்பார் ஞாயிறு என்ற ஊரில் வேளாளர்குலத்தில் தோன்றினார்.

சுந்தரர் தோன்றிய குலத்தைச் சொல்ல வந்த சேக்கிழார்,

**"மாதொரு பாகனார்க்கு வழிவழி**
**அடிமை செய்யும் வேதியர் குலம்"**

என்று கூறிய பாங்கு அருமையானது.

ஆம். பின்னர் சுந்தரரை ஆட்கொள்ளும் போது இறைவன் எழுதும் வாசகத்திற்கு அடிப்படையாக அறிமுகப்படுத்தும் போதே வழிவழி அடிமை என்ற சொற்றொடரை வைக்கின்றார்.

ஆலால சுந்தரருக்குச் சடையனாரும், இசைஞானியாரும் "நம்பியாரூரர்" என்று பெயரிட்டு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக அன்பையெல்லாம் கொட்டி வளர்த்தார்கள். தொடரும்...

# பங்குனி உத்திரத்தில் நடைபெற்ற தெய்வயானை - முருகர் திருமணம்



சூரபதுமனையும் அவன் அசுரப் படைகளையும் சம்ஹாரம் புரிந்த முருகப் பெருமான் திருச்செந்தூரில் சிவனுக்கு பிரதிஷ்டை பண்ணி இறைவனை வழிபட்ட பிறகு தம் படைகளுடன் திருப்பரங்குன்றம் வந்து சேர்ந்தார்.

தேவதச்சனை அழைத்துத் திருப்பரங்குன்றத்தில் ஒரு கோவிலை அமைக்கச் செய்தார். அப்போது இந்திரன் முருகப் பெருமானை வணங்கித் தம் இந்திரபுரித் தலைமை யேற்க வேண்டுமென வேண்டினான். முருகப்பெருமான் அதை மறுத்துவிட்டார்.

''எம்பெருமானே! நீர் தேவசேனாபதியாக வீற்றிருந்து எங்களுக்கு நலம் புரிந்தீர். இழந்த அமராவதியையும் அரசுரிமையும் பெற்றோம். நீர் தேவ சேனாபதி என்ற நினைவு எப்போதும் எங்களுக்கு இருத்தல் வேண்டும். என் பெண் தேவசேனை உன்னை அடைவதற்குத் தவம் செய்து கொண்டிருக்கிறாள். அவனை நீர் மணம் புரிந்து என்றும் தேவசேனாபதியாக விளங்க வேண்டும்'' என்று தேவேந்திரன் வேண்ட முருகப் பெருமான் அவன் விண்ணப்பத்தை ஏற்றுக் கொண்டார்.

திருமாலின் இரு விழிகளிலிருந்து தோன்றிய அமுதவல்லி, சுந்தரவல்லி எனும் பெயருடைய நங்கையர்கள் முருகப்பெருமானை முன்னரே கண்டு தங்களைத் திருமணம் செய்து கொள்ள வேண்டியபோது முருகப்பெருமான் அமுதவல்லியை இந்திரன் மகளாக அமராவதியிலும், சுந்தரவல்லியை வேட்டுவத்தலைவன் நம்பியின் வளர்ப்பு மகளாக பூவுலகிலும் பிறக்குமாறு திருவருள் புரிந்திருந்தார்.

அவ்வாறு இந்திரன் மகளாகப் பிறந்து, அவன் யானையான அயிராவத்தால் வளர்க்கப் பெற்ற அருந்தவமகளே தேவயானை யாவார்.

''அவுணர்கள் எனும் களை எடுத்து, தேவர்களாகிய எங்களைச் சிறை மீட்ட செவ்வேள் உமக்குச் செய்ந்நன்றியாக தேவயானையை வழங்குகின்றோம்.அவள் தன்னை மணம் புரிந்தருள்வீராகில் பிறவிப் பயன் பெற்றவர்களாவோம் என்று தேவேந்திரன் வேண்டுகின்றான்.

''**அந்நங்கை தானும் மிக நோற்றனள் ஆதலால் நீ முன்னும்படியே மணம் நாளை முடித்தும்**'' என்று திருமணம் செய்ய இசைகின்றார் முருகப்பெருமான்.

பங்குனி உத்திரநன்னாளில் நிகழ்ந்த இத் திருமண வைபவத்தைக் காண இறைவனுடைய சேனா கணங்களும், முசுகுந்தன் உள்ளிட்ட அடியார்கூட்டமும் திருப்பரங்குன்றம் வந்து சேர்ந்தன.

தெய்வயானை முருகப்பெருமான் திருமணம் காண பார்வதி பரமேசுவரன் விமானத்தில் வான் வழியாக வந்து முருகப்பெருமான் ங்கினர். தந்தையரை வணங்கி தாய் மணியாசனத்தில் அமர்த்தித் ரு முடிதாழ்த்தி வணங்கினார்.

தேவேந்திரனும் இந்திரனும் மணமகனாம் முருகப்பெருமானை எதிர்கொண்டு வரவேற்று பசும்பாலினால் முருகப்பெருமானுடைய பாதங்களை தூய்மைப்படுத்திப் பாதபூஜை நடத்தினர்.

**"எதிர்புகுந்திடும் இந்திராணிதன்**

**புதியதோர் பசுப் பொழிந்த தீய பால்**

**நிதியின் கொள்கலம் நிரப்பி வந்துவேள்**

**பதயுகங்களில் பரிவோடு ஆட்டினாள்"**

என்று இந்திரண் செய்த பாதபூஜையை வர்ணிக்கிறார் கச்சியப்ப சிவாச்சியார்,

இந்திரன் தன் மகன் தேவ சேனையின் கரங்களைப் பற்றி முருகப்பெருமான் திருக்கரத்தில் கொடுத்து ''உன் அடியவன் ஆகிய யான் என் மகளை உனக்கு கொடுத்தேன்'' என்று கூறித் தாரைவார்த்துக் கொடுத்தான். பிரமன் மங்கல நாண் கொடுக்க அதை வாங்கித் தேவசேனையின் திருக்கழுத்தில் கட்டி அவளுக்கு மாலை சூட்டித் திருமணம் புரிந்தார். அக்கினியை வலம் வந்து, தேவ சேனையின் திருவடியைப் பிடித்து அம்மிமேல் வைக்கத் திருமணம் இனிதே நிறைவேறுகின்றது.

மலை மடந்தையும் இறைவனும் மைந்தற்கும் மகட்கும்
தலைமை செய்தருள் புரிதலும் சாலையுள் இருந்த
அலரவன் முதல் அமரரும் முனிவரும் அணங்கின்
குலமடங்கலும் அவரடி முடிமிசைக் கொண்டார்''

என்று பங்குனி உத்திரத்தில் திருப்பரங்குன்றத்தில் சிறப்புற நிகழ்ந்த தெய்வயானை-முருகர் திருமணத்தைப் போற்றிப் பாடுகின்றார் கச்சியப்பர். ★



# அருள்மிகு காஞ்சியில்
# அன்னை காமாட்சி - ஏகாம்பரேஸ்வரர் திருமணம்

திருப்புகழ் மாமணி **மு. அருணகிரி**

தீயவற்றைக் கனவிலும் நினையாத, தூயமாந்தர்கள் வாழும் நாடு தொண்டை நாடு.

தொண்டை நாட்டில் கல்வியில் கரையிலாத திருநகராய் விளங்குகின்றது காஞ்சிமாநகரம்.

காளிதாசர் ''நகரேஷீ காஞ்சி'' என்று போற்றுகின்றார்.

''தரையிடங்களில் சிறந்த காஞ்சியந்தலம்'' என்பது கச்சியப்பர் வாக்கு.

முந்தி தரும் எழு திருத்தலங்களில் காஞ்சியும் ஒரு திருத்தலம் ஆகும்.

அயோத்தி, மதுராபுரி, ஹரித்துவார், காசி, அவந்தி, துவாரகா, காஞ்சி ஆகியன முத்தித்தரும் எழு திருத்தலங்கள் ஆகும்.

''மலர்தலை உலகத்துள்ளும் பலர் தொழ

விழவு மேம்பட்ட பழவிறல் மூதூர்''.

எனக் காஞ்சி நகரம் திருவிழாக்களால் மேம்பட்ட பழம்பதி என்பதைப் பெரும்பாணாற்றுப்படை எனும் சங்க இலக்கியம் கூறுகின்றது.

''கோயிற் திருநகர்'' என்ற புகழ் கொண்ட காஞ்சிபுரத்தின் கிழக்கே வரதரும், மேற்கே ஏகாம்பரரும், நடுவில் காமாட்சியம்மன் கோயிலும் அமைந்திருப்பது மதுரை மீனாட்சியம்மன் திருமணக் கோலத்தை நினைவுபடுத்துவதாகும்.

ஒரு முறை விளையாட்டாக தேவி பார்வதி இறைவனின் கண்களை மூட, உலகம் இருள்சூழ உயிர்கள் தடுமாறின.

இத்துன்பம் விளைத்த தேவியின் விளையாட்டுக்குக் கழுவாய் செய்ய'' எம்மை எவரும் அடைய வாயிலாய் உள்ள காஞ்சிக்குப் போய் ஆகம முறைப்படி அர்ச்சனை செய்து முப்பத்து இரண்டு அறங்களையும் செய்க'' எனப் பணித்தார் சிவபெருமான்.

பத்ரிகாச்சிரமத்தில் காத்யாயனர் குழந்தைப் பேற்றுக்காகத் தவம்செய்ய, அம்பிகை அவ்விடத்தில் குழந்தையாகத் தோன்றித் தவழ்ந்தார்.

கார்த்தியாயனி என்ற பெயர் கொண்டு நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர வளர, முனிவருக்கு அவதாரக் காரணங்கள் விளங்க அம்மையைக் காஞ்சிக்கு அனுப்பினார்.

காஞ்சிக்கு வந்த அம்பிகை, நான்கு வேதங்களைக் கிளையாகக் கொண்ட ஏக அம்ரம் அதாவது ஒற்றை மாமரத்தின் அடியில் மணல் லிங்கத்தை ஊசி முனையில் இருந்து தவம் செய்து வழிபட்டார்.

அப்போது சிவபெருமான் தம் சடையிலுள்ள கங்கையைப் பெருகச் செய்தார். அன்னையின் கட்டளைப்படி பணிப்பெண் ஒருத்தி காளிவடிவில் தடுத்தார். தடுக்க இயலவில்லை. விஸ்வரூபியாகத் திருமாலும் தடுத்தார். அவராலும் தடுக்க இயலவில்லை.

இது இறைவனின் திருவுள்ளம் என்று அறிந்து மணல் கரைந்து இலிங்கவடிவம் போகாதிருக்க இறைவனைச் சரண் அடைந்ததேவி இலிங்கத்தையே கையாலும், மார்பாலும் தழுவிக் கொண்டார்.

தேவியின் பொன்மேனி தழுவ மகிழ்ந்த சிவபெருமான் மாமரத்தினின்று வெளிப்பட்டு காட்சி வழங்கினார். ஏகாம்பருக்குத் ''தழுவக் குழைந்த நாதர்'' என்று பெயர் வந்தது.

பங்குனி உத்திர முழுநிலாநாளில் காமாட்சி ஏகாம்பரேசுவரர் திருமணம் நடைபெற்றது.

ஒவ்வொரு பங்குனி உத்திர முழுநிலா இரவில் தேவி காமாட்சி - ஏகாம்பரேசுவர், திருமணம் மிகச்சிறப்பாக நடைபெறும். அதேநேரத்தில் அதே மண்டபத்தில் மணமக்கள் பலரும் திருமணம் செய்து கொள்ளும் காட்சி கண்கொள்ளாக் காட்சியாகும்.

**''ஏலவார் குழலாள் உமை நங்கை**

**என்றும் ஏத்தி வழிபடப் பெற்ற**

**காலகாலனைக் கம்பன் எம்மானைக்**

**காணக் கண் அடியேன் பெற்றவாறே''**

என்பது சுந்தரர் தேவாரம்

★

அன்று காட்டில் பிரசேனன் கொல்லப்பட்டுக் கிடந்தான். சில நாட்களுக்குப் பின், அவனுடலைத் தேடிக் கண்டு பிடித்தான் சத்ராஜித் மன்னன். ஆனால், சியமந்தக மணியை மட்டும், பிரஸேனனின் உடலில் காணப்பட வில்லை (மணி ஜாம்பவானிடம் இருந்ததால்!)

மன்னனும், மக்களும் முடிவு கட்டி விட்டார்கள். ஸ்யமந்தக மணிக்கு ஆசைப்பட்டு, யாரோ பிரசேனனைக் கொன்று விட்டு, மணியைக் கவர்ந்து சென்றிருக்கிறார்கள் என்று.

அப்படியானால், மகா வீரனான பிரசேனனை யார் கொன்றிருக்க முடியும்? அம் மாவீரனைக் கொல்ல இருவரால் மட்டுமே முடியும். ஒருவன் ஸ்ரீ கிருஷ்ணன். மற்றொருவன் துரியோதனன். ஆதலால், இந்த இருவரில் ஒருவர் தான் குற்றவாளி.

விசாரித்ததில் பிரஸேனன் கொல்லப்பட்ட அன்று, துரியோதனன், தன் தலை நகரமான அஸ்தினாபுரத்தில் இருந்திருக்கிறான். ஆனால், கண்ணன் துவாரகையில் இல்லை. மேலும், எப்போதும், எங்கு சென்றாலும், அனைவரிடமும் சொல்லிக் கொண்டு செல்லும் கண்ணன், அன்று எவரிடமும் சொல்லிக் கொள்ளாமல், அவசர அவசரமாகச் சென்று விட்டான்! ஆதலால், ஸ்யமந்தக மணிக்கு ஆசைப்பட்டு, கண்ணன் தான் பிரசேனனைக் கொன்றிருக்க வேண்டும் என்று முடிவு கட்டி விட்டார்கள் அனைவரும்.

தற்காலத்தில் ''Circumstantial Evidence'' என்று கூறுகிறார்களே! அதுதான் இது!!

கண்ணன் மேல் பழி! அதுவும் திருடன் என்ற ஒரு பழி, கொலைப் பழி மற்றொன்று!!

# கடமை தவறா கருநிறத்தான்

ஜோதிடச் சக்கரவர்த்தி
**ஏ.எம். ராஜகோபாலன்**



சனிபகவானின் 7½ச் சனியின் விளைவு தான் இது. இதனை முழுதுமாக நம்பிவிட்டார் அண்ணன் பலராமனும் கூட. துவாரகை மக்கள் கண்ணீர் வடித்தனர் - ''நம் கண்ணனா இதைச் செய்திருப்பான்?'' என்று மனம் துடித்தனர்.

எதையும் அறியாமல், பாண்டவர்களைப் பார்த்த திருப்தியில் துவாரகை திரும்பினார் கண்ணன்.

அரண்மனை களை இழந்து சோகமயமாக இருந்தது. கண்ணனைக் கண்டதும், அனைவரும் முகம் கவித்து கண்ணீர் சிந்தினர். சிங்கமாகச் சீறினார் அண்ணன் பலராமன். அப்போது தான் விஷயம் தெரிந்தது கண்ணனுக்கு, கண்ணன் திடுக்கிட்டான்.



''ஓகோ! சனியின் வேலையா இது?'' - ''நான் நிரபராதி என்பதை நிரூபிக்காமல் அரண்மனை திரும்ப மாட்டேன்.'' என்று சபதம் செய்து விட்டு, பிரசேனன் இறந்த காட்டிற்குச் சென்றார். அங்கு ஜாம்பவானைச் சந்தித்து நடந்த உண்மைகளையும தெரிந்து கொண்டார். அப்போது தான் கண்ணனுக்கு 7½ச் சனி காலமும் நீங்கியது.

ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தில், ஸ்ரீராமபிரானாக, ஜாம்பவானுக்குத் தரிசனம் அளித்து அருள்புரிந்தார். மனம் மகிழந்த ஜாம்பவான், தன் அருமைப் பெண்ணாகும் ஜாம்பவதியைக் கண்ணனுக்கு

# மடவார் வளாகம் அருள்மிகு வைத்தியநாதசுவாமி திருக்கோயில் திருப்பணிகள்







*மடவார் வளாகம் அருள்மிகு வைத்தியநாதசுவாமி திருக்கோயிலில் 11.02.2005 அன்று திருக்கோயில் அலுவலகம், வணிக வளாகம், சுகாதார வளாகம், உணவுக் கூடம் கட்டிடத் திறப்புவிழா மற்றும் தாமரைக் குளம் கட்டுமானப் பணி தொடக்கவிழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. மாண்புமிகு இந்து சமய அறநிலையத்துறை அமைச்சர் திரு பி.சி.ராமசாமி அவர்கள் கட்டிடங்களைத் திறந்து வைத்து விழாப்பேருரை ஆற்றினார்கள். மாண்புமிகு இளைஞர்நலம் மற்றும் விளையாட்டுத் துறை அமைச்சர் திரு இன்பத்தமிழன் அவர்கள், தமிழ்வளர்ச்சி, பண்பாடு மற்றும் அறநிலையத்துறை அரசுச் செயலாளர் திரு பு.ஏ.இராமையா இ.ஆ.ப., அவர்கள் இவ்விழாவில் பங்கேற்றுச் சிறப்பித்தார்கள்.*

விவாகம் செய்து கொடுத்து மகிழ்ந்தார்.

துவாரகைக்குத் திரும்பிய கண்ணனுக்கும், தேவி ஜாம்பவதிக்கும் மக்கள் ஆரத்தி எடுத்து வரவேற்றனர். கண்ணன் நிரபராதி என்பதை அறிந்த மக்கள் மனம்மகிழ்ந்தனர்.

துவாரகை அரண்மனை வாயிலில் நடுக்கத்துடன் சனி பகவான் நின்றிருந்தார். 7½ச் சனி காலம் முடிவுற்றதால், கண்ணனிடம் விடைபெற்றுச் செல்லக் காத்திருந்தார் அவர்.

அவரைக் கண்ட கண்ணனுக்கு சீற்றம் பொங்கி எழுந்தது. சனியைத் தண்டிக்க விரைந்தான் கண்ணன். இரு கரம் கூப்பித் தன்னை மன்னிக்குமாறு வேண்டி நின்றார் சனி.

''என் கடமையைச் செய்தேன். அதனால் அல்லவா தங்களுக்குப் பேரழகியான ஜாம்பவதி கிடைத்தாள்! 7½ச் சனி முடிவுறும் போது, யாராக இருந்தாலும் அவர்களுக்கு மிகப் பெரிய நன்மையைச் செய்த பின்பே விலகுவேன் என்று தன்னை மன்னித்து விடும்படி வேண்டினார்.

கண்ணன் கருணையே உருவானவன் அல்லவா! மன்னித்தும் விட்டான்.

ஆதலால் தான், 7½ச் சனி முடியும் போது எவராக இருந்தாலும், சனிபகவான் ஒரு பெரிய நன்மையைச் செய்து விட்டே விலகுவார்.

கொடுப்பதிலும் இணையற்றவன் சனி, திருநள்ளாறு திருத்தலத்தை தரிசிப்பதால் இந்த உண்மையை அனுபவத்தில் காணலாம்.

''நீலாஞ்சக ஸமாபாசம் ரவிபுத்ரம் யமாக்ரஜம்
சாயா மார்த்தாண்ட ஸம்பூதம் நமாமி ஸனைச்சரம்''

பொருள்: கருநீல மை நிறம் கொண்டவனும், சூரியனின் புத்திரனும் எம தர்மராஜரின் மூத்த சகோதரனும், சாயா தேவிக்கும் சூரியனுக்கும் பிறந்தவனும், நிதானமாகச் செல்பவனுமான சனீஸ்வரனை வணங்குகிறேன்''.

★

சிறப்பாசிரியர் மற்றும் திருமிகு **த.பிச்சாண்டி** இ.ஆ.ப., ஆணையர்,
வெளியிடுவோர் : தமிழ்நாடு அரசு இந்து சமய அறநிலையஆட்சித்துறை, சென்னை - 600 034.தொலைபேசி : 28334811/12/13
ஆசிரியர் : கவிஞர் டாக்டர். த. அமிர்தலிங்கம், எம்.ஏ., பி.எச்.டி.,
அச்சிடுவோர் : இராயப்பேட்டை எழுதுபொருள் அச்சு மற்றும் உபபொருள்கள் உற்பத்தியாளர் தொழிற் கூட்டுறவு சங்கம் லிமிடெட். சென்னை-14. தொலைபேசி எண் : 28485670

**இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை வெளியிடும் "திருக்கோயில்" சிறந்து விளங்க எங்கள் வாழ்த்துக்கள்**



**இப்படிக்கு**

**N. தேவதாஸ்**

**வசந்தபவன் ஹோட்டல்**

**இராமேசுவரம்**

**S. வீரபாகு**

**குருலாட்ஜ்**

**இராமேசுவரம்**



# அருள்மிகு
# தண்டாயுதபாணி சுவாமி திருக்கோயில், பழனி

# 2005ஆம் ஆண்டு
# பங்குனி உத்திரத்திருவிழா அழைப்பிதழ்

## முக்கிய திருவிழா நாட்கள் விவரம்

| நாள் | நிகழ்ச்சி | நேரம் |
|---|---|---|
| 19-3-2005 | கொடியேற்றம் | காலை 10.00-11.20 மணிக்குள் |
| 20-3-2005 | வெள்ளி காமதேனு வாகனத்தில் திருவுலா | இரவு 8.00 மணி |
| 21-3-2005 | ஆட்டுக்கிடா வாகனத்தில் திருவுலா | இரவு 8.00 மணி |
| 22-3-2005 | தங்கமயில் வாகனத்தில் திருவுலா | இராவு 8.30 மணி |
| 23-3-2005 | யானை வாகனத்தில் திருவுலா | இரவு 8.30 மணி |
| 24-3-2005 | திருக்கல்யாணம்<br>வெள்ளி ரதம் | இரவு 7.00 - 8-15 மணிக்குள்<br>இரவு 9.00 மணி |
| 25-3-2005 | பங்குனி உத்திரம் திருத்தேர் | மாலை 4.35 மணி |
| 26-3-2005 | தங்கக் குதிரை வாகனத்தில் திருவுலா<br>வாணவேடிக்கை | இரவு 10.00 மணி |
| 27-3-2005 | வெள்ளி பிடாரி மயில் வாகனத்தில் திருவுலா<br>புதுக்கோட்டைச் சப்பரத்தில் கிரிவீதி உலா | இரவு 7.30 மணி<br>இரவு 10.00 மணி |
| 28-3-2005 | தங்கக் குதிரை வாகனத்தில் திருஉலா<br>பங்குனி உத்திரம் திருவிழா நிறைவு | இரவு 11.00 மணி |

1. பக்தர்கள் தரிசனம் செய்வதற்கு தரிசன வசதி ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.
2. போக்குவரத்துக் கழகங்களின் மூலம் சிறப்புப் பேருந்து வசதி செய்யப்பட்டுள்ளது.
3. முதலுதவி மருத்துவ மைய வசதி ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.
4. பக்தர்களுக்கு அன்னதானத் திட்டத்தின் கீழ் அன்னதானம் வழங்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.
5. தரிசன ஏற்பாட்டிற்கு ரோப்கார் மற்றும் வின்ச் பயணத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.
6. தரமான அபிஷேக பஞ்சாமிர்தம் விற்பனை செய்யப்படுகிறது.
7. திருவிழா நாட்கள் முழுவதும் பக்திச் சொற்பொழிவு மற்றும் பக்தி இன்னிசை நடைபெற ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

பங்குனி உத்திரத் திருவிழாவிற்கு வருகை தரும் பக்தகோடி பெருமக்கள் அனைவரையும் மனங்கனிந்து வரவேற்கின்றோம்.

**த. சுந்தரம்,** பி.ஏ.பி.எல்
இணை ஆணையர்/ நிர்வாக அதிகாரி

**எஸ். வி. பாலசுப்பிரமணியம்,**
அறங்காவலர் குழுத் தலைவர்

அறங்காவலர்கள் :
**கே.எஸ்.என். வேணுகோபாலு, வி.ஜெயபால், ஆர்.பி.பரமசிவம், சி.கௌரியம்மாள்**